# அழகுத் தென்றல் அள்ளி வீசிட

முத்தென ஒளிரும் முகமலர் பெற்றிட

# லக்மே வேனிஷிங் க்ரீம்

லக்மே வேனிஷிங் க்ரீம் தடவி, உங்கள் மேனியை பட்டுப் போல் பளபளப்பாக்கச் செய்யுங்கள். இதைத் தடவிய பின் முகப் பவுடர் பூசுங்கள்; அல்லது அப்படியே விட்டுவிடுங்கள். எவ்வகையில் நோக்கினும் இந்த க்ரீம் மேன்மையானது. இது சருமத்தின் மீதுள்ள எண்ணெய்ப் பசையை நீக்கி, உங்கள் சருமம் புதுமெருகு பெற்று, கறையின்றி துலங்க உதவுகிறது. உங்கள் முகம் எண்ணெய்ப் பசையின்றி எழிலோங்கி விளங்க, இதைக் காலையில் தடவுங்கள். உங்கள் மேனி எடுப்புடன் விளங்க, இதை மீண்டும் மாலையில் தடவுங்கள். உங்கள் முகமலர் என்றுமே முத்தென ஒளிர்ந்திட, லக்மேயின் சிறு ஜாடியை உங்கள் கைப்பையில் வைத்திருங்கள்.




லக்மே வேனிஷிங் க்ரீம்.
3 வசதியான சைஸ்களில்.

ASPL-164

# கல்கி
பொருளடக்கம்

பரிதாபி ஆவணி, 18 ■ செப்டம். 3, 1972





| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை(இலங்கைநாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

கல்கி மலர் 32 இதழ் 5



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்

# சிம்ஸன் தேர் நகருகிறது!

மூடிக் கிடந்த சிம்ஸன் கம்பெனித் தொழிற்சாலைகள் மீண்டும் திறக்கப்பட்டுள்ளன என்ற செய்தி மிக மிக நல்ல செய்தி. இதற்கு வகை செய்த அனைவருக்கும் பாராட்டுக்கள் உரித்தாகும்.

ஜூன் 15-ந் தேதியிலிருந்துதான் இந்த நிறுவனங்கள் முற்றிலும் மூடப்பட்டன என்றாலும், அதற்குமுன்பே சுமார் ஏழு, எட்டு மாதங்களாக வேலை நிறுத்தங்களும், உற்பத்தித் தடங்கல்களும், சண்டைச் சச்சரவுகளும் நீடித்து ஏற்பட்டுக் கொண்டே இருந்ததால், மொத்த உற்பத்தி நஷ்டம் இரண்டு கோடி ரூபாய் அளவுக்கு இருக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. தொழிலாளர் குடும்பங்களுக்கு ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்களை அளவிட்டுக் கூற முடியாது.

மத்திய அரசுகூடக் கவலை கொள்ளும் அளவுக்கு இத்தொழிற்சாலைகளில் வேலை நிறுத்தம் இருந்தது. தாங்களே தலையிடுவதற்கான சூழ்நிலைகளும், வற்புறுத்தல்களும் இருந்த போதிலும், அமைதி இழக்காமல், அவசரப்படாமல், ஆலோசனைகள் மூலமே நிலைமையைச் சமாளித்ததற்கு மத்திய அரசாங்கத்தைப் பாராட்ட வேண்டும். மாநில அரசாங்கமும், தன்னுடைய பொறுப்பைக் கடைசி வரையில் தட்டிக் கழித்துக்கொண்டிருக்காமல், மாநிலத்தில் தொழில் துறைகளில் சட்டம், ஒழுங்கு முறை எப்படியும் காக்கப்பட வேண்டும் என்பதை உணர்ந்து, செயலாற்றியதற்கு அதையும் பாராட்ட வேண்டும்.

இரண்டு கோடி ரூபாய் உற்பத்தி நஷ்டமும், சுமார் நாற்பது லட்சம் ரூபாய்க்கு மேல் சம்பள நஷ்டமும் ஏற்பட்ட பிறகாவது தொழிற்சாலைகள் சுணக்கமின்றி நடந்தால்தான், தங்களுடைய நல்வாழ்வு சீர்கெடாமல் இருக்கும் என்ற உண்மையைத் தொழிலாளர்கள் உணர்ந்து சமரச முடிவுக்கு வந்தது குறித்துச் சந்தோஷப்பட வேண்டும். இன்னமும் பாதிக்குமேல் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பவில்லை என்று ஆரம்ப தினத்தன்று கூறப்பட்டாலும், நாளுக்கு நாள் நிலைமை அபிவிருத்தியடைந்து முழு ஆஜர் நிலை ஏற்படும் என்றே எதிர்பார்க்கலாம்.

அரசாங்கத்துக்கு அவப் பெயரையும் நாட்டில் எல்லா மக்களுக்கும் கலக்கத்தையும் அளித்த நிலைமை மாறிவிட்டதற்கு மகிழ்ச்சி கொண்டாலும் இரண்டு அம்சங்கள் குறித்துச் சந்தோஷப்படுவதற்கில்லை. போலீஸ் பாதுகாப்புடன் தான் தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் வேலை செய்ய முடியும் என்ற சூழ்நிலை நல்ல சூழ்நிலை அல்ல. இந்த நிலைமை நிச்சயமாக மாற வேண்டும். இதை மாற்றி அமைக்க வேண்டிய பொறுப்பு முழுக்க முழுக்க மாநில அரசாங்கத்தையே சாரும்.

தவிரவும், சிம்ஸன் கம்பெனிகளில் தகராறுகள் ஏதோ ஒருவிதமாகத் தீர்ந்து கொண்டிருக்கின்றன என்றாலும் மாநிலத்தின் பல பகுதிகளில் சிறிய தொழிலகங்களிலும், பெரிய தொழிற்சாலைகளிலும், கதவடைப்புகளும் வேலை நிறுத்தங்களும் இன்னமும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இங்கெல்லாம்கூட சம்பள நஷ்டம், உற்பத்தி நஷ்டம் எல்லாம் ஏற்பட்ட பின்னரே விவேகமும், அறிவும் பிறக்க வேண்டும் என்ற நிலைமையை மாற்றி எந்தத் தகராறையும் பேச்சு வார்த்தைகள் மூலமே முடித்துக் கொள்வது என்றும் எந்த நிலையிலும் வன்முறைகளோ கட்சிப் பூசல்களோ தொழிலகங்களில் புகவிடுவதில்லை என்றும் உறுதியாகச் சங்கல்பம் செய்து கொண்டால் தமிழ் நாட்டின் நற்பெயரை மீண்டும் நிலைநாட்ட முடியும்.

சிம்ஸன் தொழிற்சாலைகள் விவகாரம் புகட்டும் படிப்பினையை உணர்ந்து கொள்வது அவசியம்.





சிம்சன் தொழிற்கூடங்கள்
வேலைக்குத் திரும்பியவர்கள்
முச்சந்திலே நின்ன தேர் அசையுது... நீங்களும் வடம்புடிக்க வாங்க!
வெகுநாட்களாக ஓடாத தேரை ஓட்டிய சாதனை!
தி.மு.க
முட்டுக்கட்டை போட்டதே அவர் தானென்னேன்!
காமராஜ்
இன்னும் திரும்பாதவர்கள்

கிராண்ட் மேஜிக் ஷோ
இந்திர ஜாலம்! மக்களை 'மாக்கள்' ஆக்கும் விந்தை! வந்து பார்த்து 'மாக்கள்' ஆகிக் களியுங்கள்
கட்சி மாறுபவரைத் தடுக்கும் மசோதா
வரவங்களெல்லாம் வந்தாச்சா..... கதவை மூடப் போகிறேன்!
ஆமாம், உங்ககிட்டே வரவங்களெல்லாம் வந்தாச்சு! உள்ளே இருக்கிறவங்க வெளியே வராமல் இருக்கத்தான் கதவைச் சாத்தியாகணும்!
பிலூ மோடி
அப்பாடா! நம்ம வழி 'க்ளியராச்சு!
இந்திரா மந்திரிசபை
அட! நம்ம வழிக்கு இடைஞ்சல் வந்துவிட்டதே!
தேவராஜ அர்ஸ் மந்திரிசபை

# உகாந்தாவில் கொடுங்கோன்மை

**ராஜாஜி ஸ்வராஜ்யாவில் எழுதுகிறர்:**

உகாந்தாவில் பிரஜைகளாகிவிட்டவர் உள்பட ஆயிரக்கணக்கான ஆசியர்களை அந் நாட்டு அதிபர் அமீன் நாடு கடத்துவது மிருகத்தனமான கொடூரமாகும்.

உகாந்தாவின் சர்வாதிகாரியை உலக நாடுகள் பிரஷ்டம் செய்து வைக்க வேண்டுமென ஸ்ரீமதி இந்திரா காந்தியும், எதிர்க் கட்சிகளும் ஒரு மனத்தினராக எழும்பிக் கண்டனம் தெரிவிக்க வேண்டும். யதேச்சாதிகாரி அமீனை உலக நாடுகள் தாட்சண்யம் பாராமல் ஒதுக்கி வைக்க வேண்டும்.

உகாந்தாவில் குடியேறியுள்ள 60,000 பேர்களையும் வெளியேற்றுவதற்கு என்ன தான் காரணம் சிருஷ்டிக்கப்பட்டாலும், அந் நாட்டுப் பிரஜைகளாகவே பதிவான 23,000 மக்களைத் துரத்துவதற்கு எவ்வித நியாயமான விளக்கமும் தரமுடியாது.

கடைசிச் செய்திகளின்படி உகாந்தாவில் பிரஜா உரிமை பெற்றவர்களின் வெளியேற்ற உத்தரவை அமீன் வாபஸ் வாங்கிக் கொண்டதாகக் கூறப்படுகிறது. சர்வாதிகாரி அமீன் திடுமென இவ்வளவு நல்லவராகவும் விவேகியாகவும் ஆகிவிட்டார் என்று நம்புவது சிரமமாயிருக்கிறது. பிரஜைகளாகப் பதிவானவர்களை நாடு கடத்துவது தகாது என்று இப்போது ஞானோதயம் பெற்றவர் முதலில் உத்தரவு போட்டபோது இந்த நியாயத்தை ஏன் உணரவில்லை? அவர் பழைய மனிதராகவே இருக்கிறர் என்றுதான் நான் அஞ்சுகிறேன். இந்தப் பிரஜைகளும் தங்கள் சொத்துக்களை 'அடியோடு இழக்குமாறு செய்து, அதன்பின் அவர்களை ஒட்டாண்டிகளாக வெளியேற்றத் திட்டமிட்டிருக்கிறரோ என்பது என் அச்சம்.

ஆசியர்களை வெளியேற்றுவதால் உள் நாட்டுக் குடிகளுக்கு ஏதோ பெரிய நன்மை செய்வது போன்ற எண்ணத்தை உகாந்தா மக்களுக்கு ஏற்படுத்தியிருக்கிறர் சர்வாதிகாரி அமீன். உண்மையில் அபிவிருத்தி அடைந்த தேச மக்களை வெளியேற்றுவது உகாந்தா பூர்விகக் குடிகளுக்கு எவ்விதத்திலும் நன்மை பயக்காது. தங்களைக் காட்டிலும் முன்னேற்றம் கண்ட நாட்டு மக்களின் சேவை கிடைத்தாலே உகாந்தா போன்ற நாட்டினர் அபிவிருத்தியும் செழிப்பும் காண முடியும்.

# கவிஞரின் மறைவு

தமிழக மக்களைத் தமது 'பாட்டுத் திறத்தாலே' காந்திய வழியில் சுதந்திரப் போரில் ஈடுபடுத்தியவர் நாமக்கல் கவிஞர். காந்தி மகான் உப்பு சத்தியாக்கிரகம் தொடங்கிய போது தமிழகத்திலே ராஜாஜியின் தலைமையில் திருச்சியிலிருந்து ஓர் அகிம்சைப் படை வேதாரண்யம் நோக்கிச் சென்றது. அந்தப்



படைக்கு நாமக்கல் கவிஞர் ஓர் வீர நடைப் பாட்டு எழுதித் தந்தார். அந்தப் பாட்டுத் தான்,

" கத்தியின்றி இரத்தமின்றி
யுத்தமொன்று வருகுது...."

இந்தப் பாடல் தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் எதிரொலித்தது.

அவர் பாட்டில் எவ்வளவு காந்தியம் துலங்குமோ அந்த அளவுக்கு அவரது சொந்த வாழ்க்கையிலும் காந்திய நெறியுடன், நேர்மைக்கு இலக்கணமாக வாழ்ந்தார்.

"இராமலிங்கம் பிள்ளை ஆதிகாலத்திலிருந்தே என் நண்பர். அவர் ஒரு கவிஞர், ஓவியர், தேசபக்தர். முழுக்க முழுக்க காந்திஜியின் சீடர். இராமலிங்கம் பிள்ளையுடன் இணைக்காமல் நாமக்கல்லைத் தனியே எண்ணிப் பார்ப்பது எனக்கு முடியாது. அவரது நடத்தையில் ஒரு சிறு குறையும் யாரும் கண்டு பிடிக்க முடியாது. இன்றையச் சூழ்லை மனதில் கொண்டு பார்க்கும்போது இது மிகப் பெரிய விஷயமாகிறது. சேலம் விஜயராகவாச்சாரியாரின் ஓவியத்தை இவர் தீட்டினர். சேலம் இலக்கியச் சங்கத்தின் ஒரு சுவரை அது இன்னும் அலங்கரித்துக் கொண்டிருக்கிறது என நினைக்கிறேன்" — இவ்வாறு ராஜாஜி எழுதியுள்ளார்.

நாமக்கல் கவிஞர் தேச பக்தி வெள்ளத்தில் குதிப்பதற்கு முன் வாழ்க்கையை ஓவியக் கலைஞராகத் தொடங்கினர். அத்துறையிலும் சிறந்து, 1911ம் ஆண்டு டெல்லி தர்பாரில் தங்கப் பதக்கம் பெற்றார்.

கவிஞர், சுய சரிதம் உள்பட பல நல்ல உரைநடை நூல்களும், திருக்குறளுக்குப் புது உரையும் நவீனங்களும் எழுதியிருக்கிறர்.

உண்மையான காந்தியவாதிகளின் எண்ணிக்கை குறைந்து வருவது நமது துரதிருஷ்டம். கவிஞரின் மறைவால் வருந்தும் அவர்தம் குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்கள்.

# தமிழ் நாட்டிலே

தீரன்

## போக்குவரத்துப் போலீஸும், எம். எல். ஏ.யும்

சமீபத்தில் செண்ட்ரல் இரயில் நிலையத்தில் நடந்துள்ள ஒரு சம்பவம் அனைவர் கவனத்துக்கும் கொண்டுவரப்பட வேண்டியதாகும். தமிழ்நாட்டை ஆளும் கட்சியைச் சேர்ந்த எம். எல். ஏ. ஒருவர் இரயிலேறுவதற்காகக் காரில் வந்து செண்ட்ரலில் இறங்கியிருக்கிறார். டிராஃபிக் போலீஸ் விதிகளின்படி எந்த இடத்தில் காரை நிறுத்தக் கூடாதோ அந்த இடத்தில் காரை நிறுத்தி, அட்டகாசமாக இறங்கிய அந்த எம். எல்.ஏ.வை உடனே டிராஃபிக் போலீஸ் அதிகாரி வந்து சந்தித்துக் குற்றம் சாட்டியபோது, "நான் யார் தெரியுமா?.... என்னைக் கேட்க முடியாது. முடிந்ததைப் பார்த்துக் கொள்" என்கிற பொருள் தொனிக்க அதிகாரியை மிரட்டிப் பேசியிருக்கிறார் எம். எல்.ஏ. கடமையில் கருத்துள்ள அதிகாரி 'சார்ஜ்ஷீட்' எழுதி, வழக்குப் பதிவு செய்து, மேலதிகாரியிடமும் தெரிவித்திருக்கிறார்.



எம். எல்.ஏ.யும் மேலதிகாரியோடு தொடர்பு கொண்டு, வழக்குப் பதிவு செய்த அதிகாரியைப் பணிய வைக்க வற்புறுத்தியிருக்கிறார். கெடுபிடி வளர்ந்துவிட்ட பின்னர் முதலில் வழக்குப் பதிவுசெய்த அதிகாரி, 'சட்டப்படி நான் எதைச் செய்ய வேண்டுமோ அதைத்தான் செய்தேன். என் மேல் தவறு எதுவுமில்லை' என்று பிடிவாதமாக நியாயத்தில் நின்று விட்டார்.

ஆனால் மூன்று தினங்கள் கழித்து நிர்ப்பந்தம் காரணமாக வழக்குப் பதிவு செய்த அதிகாரியே மனம் மாறி, விட்டுக்கொடுத்து அந்த ஆளும் கட்சி எம். எல்.ஏ.யை வீடு தேடிச் சென்று மன்னிப்புக் கேட்டுவிட்டு வர நேர்ந்ததாம். இப்படி நடந்திருந்தால் எந்தக் கடவுளும் இனி மேல் சட்டம் ஒழுங்கைக் காப்பாற்ற முடியாது. சட்டம் ஒழுங்குக்குத் தலை வணங்க வேண்டியவர்கள் அதிகாரிகள். அவர்களைத் தங்களுக்குத் தலை வணங்கச் செய்கிற யாரும் அதற்காகப் பெருமைப்பட முடியாது.

## முதல்வருக்கு அழகில்லை

சென்னையில் சுதந்திரதின வெள்ளிவிழா நாளில் நடைபெற்ற சர்வகட்சி விழாவில் கலந்து கொள்ளுமாறு, தாம் காமராஜ் அவர்களுக்குக் கடிதம் எழுதியதாகவும், தில்லி செல்வதால் அதற்குக் காமராஜ் இசையவில்லை என்றும் தமிழக முதல்வர் குறைகூறியுள்ளார். தமது சென்னை விழாவில் காமராஜ் போன்ற பெரியதொரு சுதந்திரப் போராட்ட



வீரர் கலந்து கொள்ளாதது பற்றி வருத்தப்படவும் குறைகூறவும் முதல்வருக்கு உரிமை இருக்கலாம். ஆனால் இன்டல் செய்யவும் உரிமை இருக்கிறதா என்று கேட்கும்படி சிதம்பரத்தில் ஒரு கூட்டத்தில் பேசியிருக்கிறார் முதல்வர். "சுதந்திரப் போராட்ட வீரர்களிலே காமராஜ் மிகவும் முக்கியமானவர்" என்று கூறிவிட்டு அப்படிக் கூறிய சில நிமிஷங்களுக்குப்பின் மீண்டும் பேசுகிறபோது முதல்வரே, "தில்லியிலே அவர் பெரிய நிகழ்ச்சியிலே கலந்து கொள்ளப் போகிறார் என்று எதிர்பார்த்தேன். 16ந் தேதி 17ந் தேதிப் பத்திரிகைகளை எல்லாம் பரக்கப் பரக்கப் பிரித்துப் பார்த்தேன். ஏனென்றால் காமராசர் ஒரு காலத்தில் நேருவுக்குப்பின் லால்பகதூர் சாஸ்திரியைப் பிரதமராக ஆக்கிய பெருந்தலைவராயிற்றே, லால் பகதூருக்குப் பிறகு இந்திராகாந்தி அம்மையாரைப் பிரதமராக்கும் தகுதி படைத்தவராக இருந்தவராயிற்றே, பிறகு இந்திராகாந்தியை எதிர்த்துப் பெரிய சைன்யத்தைத் திரட்டி இன்றைக்கும் – அகில இந்தியாவிலே அவருடைய காங்கிரஸ் சீர்குலைந்துவிட்டாலும் – தமிழ் நாட்டைப் பொறுத்தவரையிலே காங்கிரஸ் கட்சி காமராசருடைய கட்சிதான் என்கிற அளவுக்கு வலுவோடு இருப்பவராயிற்றே – அந்தக் காமராசருக்குத் தில்லிப் பட்டணத்தில் விடுதலை நாள் விழாவில் சிறப்

> தொண்ணூற்று மூன்றாண்டுகளாக மக்களின் ஆதரவுடன் நடைபெற்று வந்த ''சுதேசமித்திரன்'' பத்திரிகை மீண்டும் வெளியாகும் என்பது நற்செய்தி. பத்திரிகையை நிறுத்திவிட்டதாக முதலில் செய்தி வந்தது. இப்போது, நிர்வாகிகளுக்கும் தொழிலாளர்களுக்கு மிடையே உடன்பாடு ஏற்பட்டதால் பத்திரிகையை மீண்டும் நடத்தப் போவதாக அறிவிக்கப்பட்டிருப்பது மகிழ்ச்சி தருகிறது.
>
> — ராஜாஜி

பான இடம் கிடைத்திருக்கும் என்று எண்ணினேன். ஆனால் நான் மனம் நொந்து போனேன். அவரைப் பற்றிப் பத்திரிகையிலே எந்தச் செய்தியையும் காணவில்லை'' என்றெல்லாம் கூறியுள்ளார்.

'டில்லியில் பாராளுமன்ற உறுப்பினர் என்ற முறையில் காமராஜ் இருந்திருக்கிறார். அவருக்குச் சிறப்பான இடம் கொடுக்கப்படவில்லை; அவர் பெயர் பத்திரிகையில் காணப்படவில்லை' என்பதுபோல் குத்தலாகப் பேசியிருப்பது முதல்வருக்கு அழகில்லை. 'சுதந்திரப் போராட்ட வீரர்களில் மிக முக்கியமானவர்' என்று தம் சொற்பொழிவின் முற்பகுதியிலே திரு மு. க. கூறியிருப்பது அந்தரங்கசுத்தியோடு வெளிவந்த சொற்களாக இருக்குமாயின் பிற்பகுதிப் பிரசங்கத்தில் காமராஜ் ஏதோ டில்லி மாநகரில் கவனிப்பாரற்று இருந்ததுபோல்' — தொனிக்கும் கிண்டல் வாக்கியங்கள் வந்திருக்கக் கூடாது. ஒரு சுதந்திரப் போராட்ட வீரரைக் கௌரவிக்கும் முறையான வார்த்தைகள் அல்ல இவை.

## மாணவர்களும் பிரச்னைகளும்

கால்நடை மருத்துவக் கல்லூரி திறக்கப்படும் என்று அமைச்சர் அறிவித்ததைத் தொடர்ந்து கல்லூரியின் டீன் பெற்றோர்களிடமும், மாணவர்களிடமும் ஒரு விநோதமான உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டுத் தரச்சொல்லுகிறாராம்.

'என் பையன் ஸ்டிரைக்குகளிலும் உண்ணாவிரதங்களிலும் ஈடுபடாமல் ஒழுங்காக இருப்பான்' என்றும் 'பாடத் திட்டத்தின் மாறுதல்கள் மாணவர்களைக் கட்டுப்படுத்தும்' என்றும் பெற்றோர்கள் உறுதிமொழி தரவேண்டும் எனத் தெரிய வருகிறது. இது புதுமையான ஏற்பாடு என்று நிர்வாகம் நினைக்கலாம். ஆனால் கல்லூரி நிலைக்கு வளர்ந்து மேற்படிப்புக்கு வந்துள்ள மாணவர்களை இப்படியெல்லாம் ஒரே அடியாகப் பணிய வைக்கும் உறுதிமொழிகள் எத்தனை தூரம் பயனளிக்கும் என்பது பற்றி யாரும் யோசிக்கவில்லை.

இது இப்படி என்றால் செங்கல்பட்டு மருத்துவக் கல்லூரி மாணவர்களுக்கு வேறு ஒரு பிரச்னை. கல்லூரியில் போதுமான 'க்ளினிகல் வசதிகளே' அவர்களுக்கு இல்லையாம். சில நோய்கள் பற்றி அறியவும் ஆராயவும் அந்த வகை நோயாளிகளே அங்குள்ள மருத்துவ மனையில் கிடைப்பதில்லை என்பதால் 'க்ளினிகல் மாணவர்களை'ச் சென்னைக்கு மாற்ற வேண்டும் என்று முன்பு மாணவர்களே ஸ்டிரைக் செய்தபோது 'வேண்டிய க்ளினிகல் வசதிகள் செய்து தரப்படும்' என்று நிர்வாகம் உறுதி கூறியதன் பேரில் ஸ்டிரைக் கைவிடப்பட்டதாம். ஆனால் இன்னும் அத்தகைய வசதிகள் செய்து தரப்படாததால் க்ளினிகல் மாணவர்களின் குறைகள் தீரவே இல்லையாம்.

கோவை விவசாயக் கல்லூரி மாணவர்கள் சமீபத்தில் தமிழ்நாடு அரசு அறிவித்த ஊதிய உயர்விலும் கால்நடை விலங்கு மருத்துவக் கல்லூரிப் பட்டம் பெற்றவர்கள், என்ஜினீயரிங் பட்டம் பெற்றவர்கள் ஆகியவர்களுக்குக் கிடைக்கும் ஊதியத்தைவிட விவசாயப் பட்டம் பெறுகிறவர்களுக்கு ஊதியம் குறைவாயிருக்கிறது என்றும் இக்குறையைத் தமிழக அரசு நிவர்த்தி செய்யாவிடில் செப்டம்பர் மாதம் முதல் கால வரையின்றி வேலைநிறுத்தம் செய்ய நேரும் என்றும் அறிவித்துள்ளனர். மேற்கண்ட மாணவர் பிரச்னைகள் உடன் கவனிக்கப்பட வேண்டியனவாகத் தோன்றுகின்றன.

## பாராட்டும் முரண்பாடும்

சென்னை வியாசர்பாடியில் நடைபெற்ற அம்பேத்கார் கல்லூரி அடிக்கல் நாட்டு விழாவில் மத்திய அமைச்சர் திரு ஜகஜீவன்ராம் கலந்து கொண்டு பேசும்போது, ''ஜாதிமத பேதமற்ற சமுதாயத்தை அமைக்கத் தமிழ்நாடு அரசு பாடுபட்டு வருகிறது. கலப்புத் திருமணத்தை ஊக்குவிப்பதற்காகத் தங்கப் பதக்கங்கள் வழங்கி வருகிறது. இதை நான் மிகவும் பாராட்டுகிறேன்'' என்று மிகவும் தாராளமாகவே பாராட்டி வைத்திருக்கிறார். தமிழ் நாடு அரசைப் பாராட்டுவதில் ஒரு தங்கப் பதக்கமே பெறும் அளவு கெட்டிக்காரர் ஜகஜீவன்ராம் ஒருவர்தான். இப்படி மெடல் வழங்கிக் கலப்பு மணத்தைக் கொண்டாடுவதாகக் கூறிக்கொள்ளும் இதே தி.மு.க.வைச் சேர்ந்த முக்கிய பிரமுகர் ஒருவர்தான் சில மாதங்களுக்குமுன் 'விஞ்ஞான ரீதியாக மோகன் குமாரமங்கலம் தமிழரில்லை' என்று கூறியதன் மூலம் தி. மு. க. என்ற கட்சி தோன்றுமுன்பே சுபாவமாகக் கலப்பு மணம் செய்து கொண்ட டாக்டர் சுப்பராயன் தம்பதிகளைப் பாராட்டுவதற்குத் தவறிக் குறை கண்டிருக்கிறார். கழகத்தின் இத்தகைய சந்தர்ப்பவாதமும், முரண்பாடும் ஒருவேளை திரு ஜகஜீவன்ராம் அவர்களுக்குத் தெரியாமல் இருந்திருக்கலாம். இன்று நடைபெறும் கலப்புத் திருமணங்களைத் தங்கப் பதக்கம் வழங்கிக் கௌரவிக்கும் கழகத்தினர், அன்று நடந்த ஒரு கலப்புத் திருமணத் தம்பதியின் புதல்வரைப் பற்றி என்ன பேசுகிறார்கள், எப்படிப் பேசுகிறார்கள் என்பதை நினைத்து ஒப்பிட்டுப் பார்த்தால்தான் தி. மு. க.வின் சந்தர்ப்பவாத அரசியல் தந்திரத்தைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியும்.



# கண்ணன் பிறந்த தினம்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில் "உலகம் முழுவதும் தூங்கும் காலத்தில் ஞானி விழித்துக் கொண்டிருக்கிறான்" என்கிறார். எங்கும் ஒரே இருட்டாக இருக்கும் காலத்தில் ஒரு வெளிச்சம் தோன்றினால் அதை வரவேற்கிறோம். ஒரு பாலைவனத்தின் நடுவில் கொஞ்சம் நிழலும் நீரும் தென்பட்டால் அளவிலா ஆனந்தத்தைத் தருகிறது. இருண்ட மேகங்களின் மத்தியில் தோன்றும் மின்னல் அதிக பிரகாசத்தோடு விளங்குகிறது. ஸ்ரீ கிருஷ்ணன் தக்ஷிணாயனத்தில் ஆவணி மாதத்தில் ஸ்ரீ கிருஷ்ணபக்ஷ அஷ்டமியன்று நடுநிசியில் பிறந்தான். நமக்கு ஒரு வருஷம், தேவர்களுக்கு ஒரு நாள். உத்தராயணம் அவர்களுக்குப் பகல். தக்ஷிணாயனம் அவர்களுக்கு இரவு. ஆகையால் ஸ்ரீகிருஷ்ணன் அவதரித்த காலம் தேவர்களுக்கு இரவு ஆகிறது. இம்மாதிரியே நமக்கு ஒரு மாதம் பித்ருக்களுக்கு ஒரு நாளாகும். நமது சுக்லபக்ஷம் அவர்களுக்குப் பகல், கிருஷ்ணபக்ஷம் இரவு; ஆகையால் ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்த கிருஷ்ண பக்ஷம் பித்ருக்களுக்கு இரவாகிறது. அஷ்டமி பக்ஷத்தின் நடுவில் வருவதனால் அன்று பித்ருக்களுக்கு நடுநிசியாகும். ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்தது அஷ்டமியன்று நடுநிசி. இதனால் என்ன ஏற்படுகிறது? ஸ்ரீ கிருஷ்ணன் அவதரித்த காலம் தேவர்கள், பித்ருக்கள், மனிதர்கள் எல்லாருக்கும் நிசி. இருட்டு அதிகமாக இருக்கும் சமயம். ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்ததும் இருள் நிறைந்த சிறைச்சாலை. இப்படி ஸ்ரீ கிருஷ்ணவதார காலத்தில் எல்லாம் இருள்மயமான சூழ்நிலை.

அவனுடைய பெயரும் கிருஷ்ணன்; 'கிருஷ்ண' என்றும் 'கறுப்பு' என்று பொருள். அவனது மேனியும் கறுப்பு. இப்படி ஒரே கறுப்பான சமயத்தில் ஆவிர்ப்பவித்த ஞான ஒளியானதால்தான் மங்காத பிரகாசமுடையதாய் இன்றும் என்றும் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது. அஞ்ஞானத்தால் இருண்டிருக்கும் உலகத்தில்தான் ஞானத்தின் மகிமை விளங்கும். அவனுடைய கீதை உலகெங்கும் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அவன் நிறைந்திருக்கும் ஸ்ரீபாகவதம் புராணச் சிரேஷ்டமாக விளங்குகிறது. உடல் இருக்கும் உயிருக்கு ஒளியளிப்பது கண். உலகத்துக்கே ஒளியளிப்பவன் கண்ணன். நம் தென்னாட்டில் அவன் கிருஷ்ணன் மாத்திரம் அல்லாமல் கண்ணனும் ஆகிவிட்டான். உள்ளக் கண்ணையும் வெளிக் கண்ணையும் அம்ருதத்தில் மூழ்கடிக்கும் வடிவம் அவனுடையது. காதின் வழியாகவும் வேணுவின் சங்கீத அம்ருதத்தையும், உபதேச சாரமான கீதாம்ருதத்தையும் ஊட்டுவித்துக் குளிர வைக்கும் அந்தக் கண்ணனே நம் உலகுக்குக் கண்; கறுப்பினிடையே விளங்கும் ஒளி.

ஸ்ரீ கிருஷ்ணன் ஒரே அவதாரத்தில் அநேக விதமான லீலைகளைச் செய்து நடித்திருக்கிறான். மிகவும் சேஷ்டை செய்யும் குழந்தை, பிறகு மாடு மேய்க்கும் பையன், குழலூதும் ரசிகன், மல்யுத்தத்தில் தேர்ந்தவன், காளை மாடுகளை அடக்கிக் கட்டுபவன், ராஜதந்திர நிபுணன், தூது செல்பவன், ஸாரதி, துரோபதை குசேலர் போன்ற அநாதர்களை ரக்ஷிப்பவன், பீஷ்மருக்கு முக்தி அளித்தவன், பீஷ்மருக்கு மாத்திரமல்ல – தன்னைக் கொல்லும்படியான அம்பைப் பிரயோகித்த வேடனுக்கும் முக்தி கொடுத்தவன். இப்படி யெல்லாம் லீலை செய்திருக்கிறான். உலகத்தில் நல்லதும் பொல்லாததுமாக, அநேக விதமான மனப்போக்கை உடையவர்களாக ஜீவர்கள் அமைந்திருக்கிறார்கள். வீரனும் சூரனும் திருடனும் ஸ்திரீ லோலனும் பேதையும் உழைப்பாளியும் கிழவனும் குழந்தையும் இறுமாப்புடையவனும் பரோபகாரியும் மனமுருகுபவனும் கல்நெஞ்சனும் கஞ்சனும் ஔதார்யனும் மூடனும் கல்விமானும் யோகியும் ஞானியுமாகப் பலவிதமான மனநிலையை உடையவர்கள் உலகத்தில் அமைந்திருக்கிறார்கள். இவர்களில் தீய அம்சம் உள்ளவர்களை முற்றிலும் நல்ல அம்சங்களைக் கொண்ட மகாத்மாவால் ஆகர்ஷிக்க முடியாமலும் போகலாம். ஒரு திருடனுக்கு இன்னொரு திருடனைப் பற்றிய கதையே ரசமாயிருக்கும். ஓர் உல்லாச புருஷனுக்கு இன்னொரு உல்லாச புருஷனின் கேளிக்கைகளே சுவாரசியமாக இருக்கும். ஸ்ரீ கிருஷ்ணன் நல்லவர்களை மட்டுமின்றி மற்றோரையும் கவரவேண்டுமென்றே ஜாரசோர சிகாமணியாக வேஷம் போட்டான். பற்பல போக்குக் கொண்ட மக்கள் எல்லாரையும் தனது வகை வகையான லீலைகளால் தனித்தனியே ஆகர்ஷித்துத் தன்னுடைய கருணைக்கும் அதன் மூலம் ஞானத்துக்கும் பாத்திரமாக்கிக் கடைத்தேற வைத்த ஸ்ரீ கிருஷ்ணாவதாரமே பரிபூர்ணாவதாரம்.

"உங்க ஆத்திரத்தை வெளிப்படுத்த இந்தப் பையன்தானா கிடைத்தான்? வேண்டும்னா என்னையே அடிச்சிடுங்க. வர வர ஏந்தான் இப்படி மாறிக்கொண்டிருக்கீங்களோ?"

"அடிக்காம தூக்கிக் கொஞ்சுவாங்களா! மூன்றாவது படிக்கிறான். சின்னக் கூட்டல் கணக்குப் போடத் தெரியவில்லே. கர்த்தி யாரு பின்னென்னு பேருதான். இந்த வயதிலே புரிஞ்சுக்காம எப்போதுதான் கத்துக்கிறது?"

சீதாராமனின் ஓங்கிய கை கீழே விழுவதற்கு முன்பாக ஜானகி மகனை இழுத்துக் கொண்டாள்.

"ஏண்டா ரவி, ஒரு நாளைக்கு உதை வாங்கினாப் புரிஞ்சுக்க முடியல்லே? தினமும் இதே பாடா? அவர் கண்ணில் படாமல் பக்கத்து வீட்டு அத்தையிடமாவது கத்துக் கொண்டு வா! சின்ன வயதிலே கணக்கிலே சூன்யமாய் இருக்கக் கூடாது. போடா!" — ஏற்கனவே வாங்கிய அடியின் தழும்புகளைத் தடவி, கண்ணீரைத் துடைத்து விட்டு மூலையில் விழுந்து கிடந்த பலகையை எடுத்துக் கொடுத்துப் பக்கத்து வீட்டுக்கு அனுப்பி வைத்தாள்.

"ஏங்க! முதல் தேதியானுந்தான் உங்க ஆத்திரத்தை அடக்க முடியாது. இப்போ நீங்களா அடக்கிக் கொள்ளக் கூடாதா? உண்மையைச் சொல்லுங்க. எல்லாம் என்மேல் உள்ள கோபந்தானே!"

சீதாராமனிடமிருந்து எந்த விதமான பதிலும் வரவில்லே.

மேஜையின் எதிரே உட்கார்ந்து, டிராயரைத் திறந்து, குறிப்பேட்டை எடுத்துப் பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

ஒவ்வொரு பக்கத்திலும் கூட்டலுக்கும், கழித்தலுக்கும் சேர்க்கை யில்லாத குறிப்புக்களின் சிதறல்கள்.

குறிப்பேட்டை மேஜையின் மேல் போட்டு டிராவை இழுத்து மூடினார். தலையின் பின்புறத்தில் இடக்கைச் சுட்டு விரலால் பலமாகச் சொறிந்து கொண்டார்.

அப்போதும் மனத்துக்குள் அவரை உறுத்திக் கொண்டிருந்த அரிப்பு அடங்கவில்லே.

மேசை மேல் இருந்த புத்தகங்களை ஓரமாக அடுக்கி, குறிப்பேட்டை அதன் மேல் வைத்து, எவர்சில்வர் தட்டில் சூடாக இரண்டு வெங்காய தோசையை எடுத்து வந்து வைத்து, "ஸ்கூலுக்கு நேரமாகுது. சாப்பிட்டு விட்டு, மற்ற வேலைகளைச் செய்யுங்கள்" என்றாள் ஜானகி.

"இன்றைக்கு நான் ஸ்கூலுக்குப் போகலே, வெளியிலே கொஞ்சம் வேலே இருக்கு. எனக்கு டிபன் வேண்டாம்" — அவரது ஆத்திரம் தணியவில்லே.

"உங்களுக்கும் வேண்டாம், கொஞ்சம் அழுதாக்கூட அந்தப் பையன் சாப்பிட மாட்டான். என் ஒருத்திக்காக மட்டும்தானா? தினசரி இப்படியே காலையிலே வீணாகுது. டிபன் போடா விட்டானும் அமளி செய்யறீங்க... ஒன்னாவது சாப்பிடுங்க...!" என்று ஜானகி கெஞ்சினாள்.

"என்றைக்குத்தான் என் பேச்சைக் கேட்டே, இன்றைக்குக் கேட்கப் போறே? வேண்டான்னா விட்டுடேன்" என்று சொல்லிக்கொண்டே வேகமாக எழுந்து நேரங்கரில் தொங்கிய சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு, மேசை மேல் இருந்த பிளாஸ்டிக் பையின் ஜிப்பைத் திறந்து, அதனுள்ளிருந்து 'கவர்' ஒன்றை எடுத்தார்.

ஜானகியின் பார்வை நீலக்குத்தாக, தன் கணவன் மேலேயே இருந்தது.

"ஏன் அப்படிப் பார்க்கிறே? கடன் நேற்றைக்கே சாங்க்ஷனாகி 'செக்' வந்துவிட்டது. மாற்றிக் கொண்டு வருவதற்குத்தான் பாங்குக்குப் போறேன்." — எவ்வளவோ முயன்று பார்த்தும் அவர் மனத்துக்குள் வைத்துக் கொண்டிருக்க முடியாமல் சொல்லி விட்டார்.

ஜானகி ஏதும் பேசாமல் சற்று நேரம் அமைதியாக அப்படியே நின்று விட்டாள்.

சீதாராமன் பஞ்சாயத்து யூனியன் பள்ளியொன்றில் தலைமை ஆசிரியர். பதினைந்து வருடம் சர்வீஸ். திருமணமாகிப் பத்து வருடங்களாகின்றன. ரவி ஒருவன்தான் வாரிசு. அடுத்த 'கொடுப்பனை'யைச் சோதித்துப் பார்க்கவும் சந்தர்ப்பம் இல்லாமல் போய் விட்டது. ஒவ்வொரு ஆசிரியரும் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தில் ஒருவருக்காவது ஆபரேஷன் செய்ய ஆள் பிடிக்க வேண்டுமென்ற சுற்றறிக்கை வந்தபோது, அலேயும் வேலே வேண்டாம் என்று தாமே முன்வந்து 'வாசெக்டமி' செய்து கொண்டார்.



ஜானகிக்கு வீட்டோடு இருக்கும் வேலை தான். இருந்தாலும் 'மூலிங் வியாபாரத்தில்' எதையாவது வாங்குவதில் சமர்த்தி. தட்டு முட்டுச் சாமான்களும், வகை வகையான துணிகளும் இரண்டு பீரோவில் நிறைந்து கிடந்தன.

சீதாராமன் குடும்பத்துக்கு மூத்த பிள்ளை. தங்கை — தமக்கை என்று எத்தனையோ பொறுப்புக்கள்! தமது வருவாயில் செலவுக் கணக்கைச் சரிக்கட்ட முடியாமல் தவித்த போது, வைப்பு நிதியிலிருந்து ஆயிரம் ரூபாய் எடுக்கலாமென முடிவு செய்தார். அந்த முடிவுக்குள் இன்னோர் அவசர ரகசியமும் பொதிந்திருந்தது. ஒரு மாதத்துக்கு முன் அவரது தங்கை புருஷனிடமிருந்து அவசரமாக ஐந்நூறு ரூபாய் கடனாகக் கொடுத்து உதவும்படி கடிதம் வந்திருந்தது.

இந்த மாதிரிக் கடிதங்களை யெல்லாம் துணிச்சலாக ஜானகியிடம் காட்ட முடியாத குடும்ப நிலை அவருடையது.

அவளுக்குத் தெரியாமல் 'கடன்' எடுத்து அனுப்பிவிடுவது என்ற முடிவுடன் இருந்த போதுதான் ஒரு நாள் இப்படி அந்த வீடு அமர்க்களப்பட்டது.

''எத்தனை நாளைக்குத்தான் இப்படி மூடி மறைக்க வைப்பீங்க..? நீங்க சொல்லலேன்னு எனக்குத் தெரியாதுன்னு நினைப்பா?...''

''வீட்டில் நுழையும்போதே உன் ராமாயணத்தை ஆரம்பித்து விட்டாயா?.. அப்படி என்னத்தைக் கண்டுட்டே?...''

சீதாராமனுக்கு ஆத்திரம் கொப்பளித்துக் கொண்டு வந்தது.

மன அமைதியோடு இருக்கும் போதும் வீட்டில் வெகுநேரம் தங்கியிருக்கும்போதும் மனைவி எதைச் சொன்னாலும் அவர் ஏற்றுக் கொள்வார். அந்த நேரங்களில் கோபம் சிறிதும் வராது.

வெளியிலிருந்து வரும்போது மட்டும் அவருக்கு எதிராகப் பேசிவிடக் கூடாது என்பதை ஜானகியும் அறிவாள்.

'குடும்பத்தில் அமைதியை உண்டுபண்ணுவதும் குலைப்பதும் பெண்கள்தான்' என்பதைப் பள்ளியில் போதிப்பதைப் போலவே வீட்டிலும் சீதாராமன் அவளுக்குப் போதித்திருக்கிறார். அந்தப் போதனை யெல்லாம் அந்த நேரத்தோடுதான்.

''நீங்க கோபிச்சுக்கும்படியா நான் என்னங்க சொல்லிட்டேன்? மனைவிக்குத் தெரியாம குடும்பத்தில் எந்த விஷயமும் இருக்கக் கூடாது என்று நீங்கதானே சொல்லுவீங்க. இப்போ நீங்களே....''

''என்னை எப்படி மடக்குவது என்ற பாயின்டைக்கூடப் பிடித்து வைத்துக்கிட்டிருக்கிறே! என் வார்த்தையையே என்னிடம் திருப்பிச் சொல்றியா? அப்படி என்ன மறைச்சுட்டேனும்...?'' ஆத்திரப்படவும் வழியில்லாமல், கையில் இருந்த புத்தகங்களை ஷெல்பில் வைத்துவிட்டு அப்படியே நாற்காலியில் உட்கார்ந்து விட்டார்.

''உங்களோடு வேலை செய்யும் ராகவேந்திரன் மனைவி அம்புஜம் கொஞ்ச நேரம் முந்தி வந்திருந்தா. 'தலைக்கு மேலே கடன் மூழ்கிக் கிடக்குது... இந்த மனுஷன் கொஞ்சமும் காதிலேயே போட்டுக்க மாட்டேங்கிறாரு. உங்க வீட்டுக்காரருன்னாலும் ஆயிரம் ரூபாய்க்கு 'லோன்' போட்டிருக்கிறாராம். அப்படி மொத்தமா வாங்கினாத் தான் எதையாவது செய்ய முடியும்'ன்னு சொல்லிட்டுப் போனா. நீங்க கடன் வாங்கப்போற விஷயத்தை என்கிட்டச் சொல்லக் கூடாதா? எனக்குத் தெரியாம ஏன் போட்டீங்க...?''

''போடலேன்னு நீ கண்ட இடத்திலே வாங்கி வைத்திருக்கிறாயே கடன், அதையெல்லாம் எப்படி அடைக்கிறதாம்?''

''வாங்கி என்ன செய்திட்டேனும்? ஒவ்வொரு பாத்திரமா வாங்கி வைக்கிறேன். உங்க அருமைத் தங்கச்சி வரும்போதெல்லாம் ஒவ்வொன்னை எடுத்துப் போய்க் கொண்டிருக்கு. என்ன வீணாப்போச்சாம்?''

''என் தங்கச்சி எடுத்துப் போனதாலேயே இவ்வளவு கடனும் ஆயிட்டுதுங்கிறியா? எடுக்கிற கடனைக் கூட அவங்களுக்குத்தான் கொடுக்கப் போறேன். அதுக்கு என்ன ஆர்ப்பாட்



டம் செய்யப் போறே?'' அவருக்கு மூச்சு வாங்கியது.

இக்குள் ஒடுங்கிய புனையைப் போல அவளும் வார்த்தைகளை அடக்கிக் கொண்டாள்.

இந்தச் சம்பவங்களை அன்று இருவருமே நினைத்துப் பார்த்துக் கொண்டார்கள்.

''ஏங்க... செக் வந்த விஷயத்தை எனக்கு மறைத்து வைத்ததற்கு நான் வருத்தப்படலீங்க.... அதெல்லாம் எனக்குப் பழக்கத்துக்கு வந்திடுச்சு. ஆனாமட்டும் பணம் வந்தவுடனே அவங்களுக்கு இவங்களுக்குன்னு கொடுத்திடாதீங்க. எங்க அக்கா மகளுக்குத் திடீர்னு கல்யாணத்தை வைத்துக் கொண்டிருக்காங்க. பணத்துக்கு எங்கெல்லாமோ அலையறாங்க. இருந்தால் கொடுத்துதவும்படி எங்க அக்கா கேட்டா. அடுத்த மாதத்திலே எப்படியும் திருப்பிக் கொடுத்திடுவாங்க.'' ஜானகி மனத்துக்குள் புகைபோடியதை வெளியிட்டு விட்டாள்.

சீதாராமனுக்கு ஒன்றுமே புரியாத–தவிப்பைத் தாளமுடியாத மன நிலை. அந்தநேரத்தில் எதையுமே அவர் பேச விரும்பவில்லை.

பிளாட் வாங்கிய பின் பிளான் வரைவோமென்ற முடிவுடன் பையை எடுத்துக்கொண்டு வெளியில் கிளம்பி விட்டார். ஜானகி ரவியையும் பள்ளிக்கு அனுப்பி வைத்தாள்.

'வீட்டின் அமைதி குலைவுக்குத் தான்தான் காரணமா?' என்ற சிந்தனை அதன் பின்தான் அவளுக்கு வரத் தொடங்கியது.

ஆயிரம் ரூபாயோடு வீட்டினுள் நுழைந்தபோது சீதாராமனுக்கு என்னவோ தெம்பாய்த்தான் இருந்தது. சேமிப்பில் குறைந்து விட்டதே என்ற வருத்தம் கொஞ்சமும்இல்லை. ஜானகியைச் சரிக்கட்ட வேண்டுமே என்ற எண்ணம்தான் அவருக்கு.

''ஜானகி! இந்த ஒரு முறை மட்டும் ஏதும் தலையிடாதே. நாம் கொடுத்துதவவில்லை என்றால் உன் அக்கா மகள் திருமணம் நின்றுவிடப் போவதில்லை. அவங்களால் எப்படியும் சமாளித்துக் கொள்ள முடியும். என் தங்கச்சிக்கு அனுப்பலேன்னு உன்னைத்தான் கரித்துக் கொட்டுவாங்க. அதை மனசிலே வைச்சுத் தான் சொல்றேன். ஐந்நூறு ரூபாயை அவங்களுக்கு அனுப்பி விட்டு, மிகுதியை இருக்கும் கடனுக்குக் கொடுப்போம்'' என்று பேச்சை ஆரம்பித்து வைத்தார்.

தன் பேச்சொன்றும் எடுபடாதென்று ஜானகிக்குப் புரிந்து விட்டது.

''உங்க செய்கைக்கு நான் ஒன்றும் குறுக்கே நிற்கவில்லை. கொஞ்சம் கொஞ்சமாச் சேர்த்து வைத்த நகை பதினைந்து சவரனும் மார்வாடி கடையிலே தூங்கிக்கிட்டுக் கெடக்கு. அத்தனையும் இருபத்திநாலு கேரட்டு. பித்தளை மாத்து இல்லே. ஒரு வருஷமா வட்டிகூடக் கட்டாமே வைத்திருக்கீங்க... பேங்கிலே குறைந்த வட்டிக்குத் தராங்களாம்.. இதையாவது செய்யுங்க...மார்வாடிக்கடையில் உள்ளதை மீட்டு பேங்கிலேயாவது வையுங்க.வட்டிகுறையும்.''

ஜானகியின் இந்த வாதத்தை /ஏற்றுக் கொள்ள வேண்டும் போலத்தான் இருந்தது.

அடகு ரசீதுகளைத் தேடிப் பிடித்து வந்த கையோடு திரும்பினார்.

''கொஞ்சம் இருங்க. ஒரு கடிதம் வந்தது. கொடுக்க மறந்துட்டேன்'' என்று சொல்லிக் கொண்டே மாடத்தில் வாங்கி வைத்திருந்த கவரை எடுத்துக் கொடுத்தாள்.

சீதாராமன் வாங்கிப் பிரித்துப் படித்து, பாக்கெட்டுக்குள் போட்டுக் கொண்டார்.

அவர் முகம் வரடு தட்டுவது போல இருந்தது. உதடுகள் உலர்ந்து விட்டன.

'என்ன கடிதம்?' என்றாள் ஜானகி.

''ஆக்ராவிலே இருக்கானே சிநேகிதன் பாசு, அவன் எழுதியிருக்கான். பட்டாணிக்காரனிடம் ஐந்நூறு ரூபாய் கடன் வாங்கி விட்டானாம். இந்த மாதத்துக்குள்ளே தரலேன்னு ஆபீசுக்கே வர்றதா மிரட்டியிருக்கானாம். மாதா மாதம் கொடுத்து வந்த அறுபது ரூபாய் வட்டியை இந்த மாதம் தர முடியாமல் போய்விட்டதால் அவன் துரத்துகிறானாம். எங்கேயாவது கடன் வாங்கித் தரும்படி எழுதி யிருக்கிறான்'' என்று கூறிவிட்டுச் சீதாராமன் வெளியில் மீண்டும் புறப்பட்டார்.

மார்வாடிக் கடைக்கும், பாங்குக்குமாக ஐந்து நடை!

மீட்டு, வைத்து – மீட்டு, வைத்ததில் எஞ்சிய தொகை முந்நூறு ரூபாய். மிகுதி வட்டிக்குக் கழிந்தது, நகை பாங்குக்கு வந்தது.

வீட்டுக்கு வந்தபோது, அது எந்தக் கணக்கிலும் அடங்கவில்லை. கடன்காரர்களுக்கா, தங்கைக்கா, நண்பனுக்கா? எதற்குமே போதாது.

தலையின் பின்புறத்தைச் சொறிந்தபடி சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது மாலை நேரப் பள்ளியும் முடிந்து ரவி வீட்டுக்குள் நுழைந்தான்.

''அப்பா! இப்போ கணக்கு நல்லா வருதுப்பா. பத்துக்குப் பத்து வாங்கினேன். கழித்தல் கணக்கை டீச்சர் நல்லாச் சொல்லித் தந்தாங்க.... ஐந்திலே ஆறு போக வேண்ணு பக்கத்து ஸ்தானத்திலே கடன் வாங்கிக் கழிக்கணும்னு சொன்னாங்க. கடன் வாங்கிக் கழித்தல் ரொம்பச் சுலபம்பா...'' என்றான் மகிழ்ச்சிப் பெருக்கோடு.

சீதாராமனும் எந்த ஸ்தானத்தில் கடன் வாங்கியும் சரிக்கட்ட முடியவில்லை என்பது அவனுக்கு எப்படிப் புரியும்?

காலையில் அடித்ததற்காக மனம் வருந்தி ரவியைத் தூக்கி மார்போடணைத்து உச்சி மோந்து, ''நீயாவது கணக்கிலே சமர்த்தா இருடா, கண்ணு!'' என்று மனமுருகிக் கூறி அவனைக் கீழே விட்டபோது அவர் பாக்கெட்டிலிருந்து பத்துக் காசு தவறி விழுந்தது.

ரவி, அதைக் குனிந்து எடுத்து அப்பாவின் பெட்டிக்குப் பக்கத்தில் வைத்திருந்த மண் உண்டியலில் போட்டான்.

'' இனிமே நான் காசு சேர்க்கப் போறேம்பா. சின்ன வயசிலேயே ஊதாரியா இருக்கக் கூடாதுன்னு எங்க டீச்சர் சொன்னாங்க...'' என்று அவன் சொல்லி நின்ற போது, சீதாராமனும் ஜானகியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

வாழ்க்கைக் கணக்கு அவர்களுக்கு மெல்லப் புரியத் தொடங்கியது.

கணக்கு மாறப் போவதில்லை. அதைப் புரிந்து கொள்ளாதவர்கள்தான் மாற வேண்டும் என்பதைத்தான் அவர்கள் பார்வையால் பரிமாறிக் கொண்டார்கள்.

# சீஸ்லிங்குகள்! சாப்பிடுங்கள்! சுவைத்து மகிழுங்கள்!
# சீஸின் நறுமணம், அலாதி ருசியே அதன்குணம்!
# கரகரப்பு மிக்கது, மொரமொரப்பானது!

**இதைத் தவிர பார்லே வழங்கும் இன்னும் நான்கு சுவைமிக்க பிஸ்கெட்டுகள் இதோ!**

PARLE
CHEESLINGS



**ஜெஃப்ஸ்**—செஞ்சுவையுடன் நறுமணம்,
வேஃபர் போன்ற மென்மை!

**ஓர்லே**—அருமையான ருசி,
அபாரமான கரகரப்பு!

**ஃபனியன்ஸ்**—ருசியில் வெங்காயம்,
புசிக்கப் பேரானந்தம்!

**ஸ்பின்-எச்**—மெந்தியக் கீரை கூடியது,
பெருமகிழ்ச்சியுடன் படைத்திடலாம்!

**சீஸ்லிங்ஸ்**—'சீஸ்' சுவையைப் பெற்றிடுவீர்,
பாராட்டுடனே பார்ட்டியில் படைத்திடுவீர்!




உங்களுக்காக, இந்தியாவில் முதன்
முதலாக லேவரி ஸ்நாக் தயாரிப்பவர்கள்

everest/277h/PP Tam

# உங்கள் சமையலை ருசித்த பின் கணவர் முகம் சுளிக்கிருரா?



**ஹிந்தாலியம் பாத்திரங்களை உபயோகியுங்கள். சீக்கிரம் அவர், உங்களை விட சமையலில் சிறந்தவர் கிடையாது என்று புகழ ஆரம்பித்துவிடுவார்.**




## 24. நல்ல மாமியார்

திடீரென்று ஒரு நாள் தாமாவும் பாமாவும் சீதாவின் வீட்டுக்கு வந்தார்கள். அவர்களுடைய வரவு சீதாவுக்கு மிக்க குதூகலம் அளித்தது. பேச்சும் சிரிப்பும் பரிகாசமுமாக வீடு ஒரே கலகலப்பா யிருந்தது.

யோக க்ஷேமங்களை விசாரித்துக் குழந்தை வஸந்தியை எடுத்து வைத்துக் கொண்டு கொஞ்சிய பிறகு, ''மிஸ்டர் ராகவன் எங்கே? அவரைக் 'கன்க்ராகுலேட்' பண்ணத்தான் முக்கியமாக நாங்கள் இன்றைக்கு வந்தோம்!'' என்றாள் பாமா.

''என் மாமியார் இன்றைக்கு ஊரிலிருந்து வருகிறார். அவரை அழைத்து வருவதற்கு இவர் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போயிருக்கிறார்!'' என்று சொன்னாள் சீதா.

''ஐயோ! மாமியார் வருகிறாளா? எனக்குப் பயமாயிருக்கிறதே!'' என்றாள் பாமா.

''உனக்குத் தெரியுமா, சீதா? கல்யாணம் பண்ணிக் கொண்டால் மாமியார் வந்து சேர்வாளே என்ற பயத்தினால்தான் நாங்கள் இரண்டு பேரும் கல்யாணமே செய்து கொள்ளவில்லை!'' என்று தாமா சொல்லி விட்டு 'ஹஹ்ஹஹ்ஹா' என்று சிரித்தாள். பாமாவும் கூடச் சிரித்தாள்.

சீதாவும் கொஞ்சம் சிரித்துவிட்டு, ''ஆனால் எனக்கு வந்திருக்கும் மாமியார் அப்படிப்பட்டவர் இல்லை! ரொம்ப நல்ல மனுஷி. அவரிடம் எனக்குப் பயமில்லை!'' என்றாள்.

''உன்னைக் கண்டு உன்னுடைய மாமியார்தான் பயப்படுகிற வழக்கமோ?'' என்று பாமா சொல்லிவிட்டு 'ஹி ஹி ஹி' என்று நகைத்தாள்.

''அதுவும் கிடையாது!'' என்று சீதா சொல்லிவிட்டு, ''ஏன் பாமா! இங்கிலீஷ்காரர்களுக்குள்ளே நாட்டுப் பெண்கள் மாமியாருக்குப் பயப்பட மாட்டார்களாமே? மாப்பிள்ளைகள் தான் மாமியார்களைக் கண்டு பயப்படுகிற வழக்கமாமே?'' என்று கேட்டாள்.

''அதெல்லாம் ஹாஸ்ய ஆசிரியர்கள் பரிகாசமாக எழுதுகிற விஷயம். நகைச்சுவை இல்லாத நம்முடைய ஊர்க்காரர்கள் அதை உண்மை என்று எண்ணிக் கொண்டு இங்கிலீஷ் நாகரிகத்தைக் கண்டிக்க ஆரம்பித்துவிடுவார்கள்!'' என்றாள் தாமா.

''இவரைக் 'கன்க்ராகுலேட்' பண்ண வேண்டும் என்கிறீர்களே? எதற்காக?'' என்று சீதா கேட்டாள்.

''ராகவன் சீமைக்குப் போய்விட்டு வந்தவரானபடியால்தான் அவருக்கு அப்பேர்ப்பட்ட தைரியம் வந்தது. நம் ஊர்க்காரர்களா யிருந்தால், தெருவிலே யாராவது விழுந்து கிடந்தால், 'நமக்கென்னத்துக்கு வம்பு?' என்று ஒதுங்கிப் போய்விடுவார்கள். ராகவன் சீமைக்குப் போனவரானபடியால் சாலையில் குத்துப்பட்டுக் கிடந்தவனை உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போய்ப் போலீஸிலும் தெரியப்படுத்தினார். இந்த மாதிரி கடமை உணர்ச்சியுடன் உன் கணவர் காரியம் செய்தது பற்றி எங்கள் தகப்பனார் ரொம்பப் பாராட்டினார், சீதா! இதை உன்னுடைய கணவரிடம் சொல்லிவிட்டுப் போகத்தான் முக்கியமாக வந்தோம்!'' என்றாள் பாமா.

அன்றிரவு உண்மையில் நடந்தது என்ன என்பது சீதாவுக்கு நன்றாக நினைவில் இருந்தது. சீமைக்குப் போய் வந்த

தன் கணவர், ''நமக்கென்னத்திற்கு வம்பு? வண்டியை ஒதுக்கி விட்டுக் கொண்டு போய்விடலாம்!'' என்று சொன்னார். சூரியாவும் தாரிணியும் தான் குத்துப்பட்ட உடலைக் காரில் தூக்கிப் போட்டுக் கொண்டு போக வேண்டும் என்றார்கள். அவர்கள் இருவரையும் பார்த்து ராகவன், ''உங்களுடைய பிடிவாதத்தினாலேதான் இந்தத் தொந்தரவெல்லாம் வந்தது!'' என்று இரண்டு மூன்று தடவை சொன்னது சீதாவுக்கு நன்றாக ஞாபகம் இருந்தது. ஆனாலும் சீதா அந்த விஷயத்தை இப்போது உடைத்துச் சொல்ல விரும்பவில்லை. தன் கணவனுக்குத் தாமாவும் பாமாவும் அளித்த கௌரவத்தைத் தான் ஏன் மறுக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டு சும்மா இருந்தாள்.

பிறகு ஏதோ நினைவு வந்து கேட்பவளைப் போல், ''பாவம்! செத்துப் போன மனிதன் உங்கள் ஊர்க்காரனுமே? அது வாஸ்தவமா?'' என்றாள்.

''ஆமாம்; அவன் எங்கள் ஊர்க்காரன்தான். எங்களூர் என்றால் ரஜனிப்பூர். ஆனால் அவனுக்காகப் 'பாவம்' என்று இரக்கப்பட வேண்டியது இல்லை. ரொம்பப் பொல்லாத மனிதன். பழைய ராஜா இருந்தபோது இவனுடைய அக்கிரமங்களைச் சகிக்க முடியாதாம். எங்கள் அப்பா திவானாக வந்த பிறகு கொஞ்சம் பயந்து கொண்டு சும்மா இருந்தான். முக்கால் வாசி டில்லியிலேதான் இருப்பான். இங்கே என்ன வத்தி வைத்துக்கொண்டிருக்கிறானோ, யார் குடியைக் கெடுக்கச் சூழ்ச்சி செய்கிறானோ என்று அப்பாவுக்குக் கூடக் கவலையாகத்தான் இருந்தது. அவன் செத்துப் போனது உலகத்துக்குப் பெரிய நஷ்டமில்லைதான். ஆனாலும் சட்டம் சட்டமல்லவா? அவனைக் கொன்றவனைக் கண்டுபிடிக்கும் விஷயத்தில் அப்பா ரொம்பப் பிரயத்தனம் செய்து இந்த ஊர்ப் போலீஸ்காரர்களை முடுக்கிவிட்டுக் கொண்டிருக்கிறார். டில்லியில் போலீஸ் சுத்த ஊழல் என்று உனக்குத் தெரியுமோ இல்லையோ?''

சீதாவுக்கு ரஜனிப்பூர் திவான் மீது கோபமாய் வந்தது. அவர் எதற்காக இந்த விஷயத்தில் சிரத்தை எடுக்க வேண்டும் என்று தோன்றியது.

''அப்படியானால் குற்றவாளியை இன்னும் கண்டுபிடிக்கவில்லையா?'' என்று கேட்டாள்.

''எங்கே கண்டு பிடிக்கப் போகிறார்கள்? மூன்று வருஷங்கள் தேடிவிட்டுக் கடைசியில் 'கொலையே நடைபெறவில்லை' என்று சொல்லி விடுவார்கள். இந்தப் புதுடில்லிப் போலீசாரின் இலட்சணம் அப்படி!'' என்றாள் தாமா.

சீதா தன் மனத்துக்குள் 'அப்படியே நடந்து விட்டால் நல்லது' என்று நினைத்துக் கொண்டாள். ஒரு கொலைகாரி தப்பித்துக் கொள்ள வேண்டும் என்பதில் தனக்கு ஏற்பட்டிருக்கும் சிரத்தையை நினைக்க அவளுக்கே வியப்பாக இருந்தது.

''ஒருவர் பேரிலும் சந்தேகம் கூட இல்லையா?'' என்றாள்.

''யாரோ 'ரஜனிப்பூர் பைத்தியம்' என்று ஒரு ஸ்திரீ அந்த மதோங்கரைச் சில நாட்களாகத் தொடர்ந்து கொண்டிருந்தாளாம். அவளாக இருக்கலாம் என்று போலீசார் சந்தேகிக்கிறார்கள். ஆனால் அப்படி யிராது என்று எனக்குத் தோன்றுகிறது. பெண்ணாய்ப் பிறந்தவள் ஒருத்தி அவ்வளவு துணிச்சலான குற்றத்தைச் செய்ய முடியுமா?'' என்றாள் பாமா.

இதற்குத் தாமா, ''ஏன் முடியாது? ஏன் துணிச்சல் வராது? ஸ்திரீகளுக்குள்ளே எத்தனையோ ராட்சஸிகள்



இருக்கிறார்கள். இராமாயணத்திலே சொல்லியிருக்கிறதே? மேலும் இந்த மனோகர் என்கிறவன் என்ன அக்கிரமம் பண்ணினானோ, அவன் பேரில் இவளுக்கு என்ன விதமான கோபமோ, அது யாருக்குத் தெரியும்?'' என்றாள்.

இந்தச் சமயத்தில் டெலிபோன் மணி கிணு கிணு வென்று அடித்தது. சீதா ரிஸீவரை எடுத்துக் காதில் வைத்து ''யார்?'' என்று கேட்டாள். பேசியது சூரியா. தானும் தாரிணியும் சீதாவின் வீட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருப்பதாகச் சொன்னான்.

''சந்தோஷம்! உன்னைப் பார்த்து ரொம்ப நாளாயிற்று. உடனே புறப்பட்டு வா!'' என்றாள் சீதா.

பிறகு, வரப்போவது யார் என்பதைத் தாமா – பாமாவிடம் சொன்னாள். அவர்கள் சந்தோஷம் அடைந்தார்கள். ''உன் அகத்துக்காரரைத்தான் பார்க்க முடியவில்லை. தாரிணியையாவது பார்த்து விட்டுப் போகிறோம்'' என்றார்கள் பாமாவும் தாமாவும்.

''அவரும் வருகிற சமயம்தான். அநேகமாக அரை மணிக்குள்ளே வந்து விடுவார். நீங்கள் இருந்து அவரையும் பார்த்து விட்டுப் போகலாம்!'' என்றாள் சீதா.

**சீ**தாவுக்குச் சூரியாவைப் பார்க்க விருப்பமாயிருந்



தது. தாரிணியையும் பார்க்க ஆசையாயிருந்தது. ஆனால் அவர்கள் இருவரும் சேர்ந்து வருவது அவளுக்குப் பிடிக்கவில்லை.

இது விஷயமாக ராகவன் புகார் கூறியது சீதாவின் மனத்தில் பதிந்திருந்தது. ''சூரியாவும் தாரிணியும் அடிக்கடி ஒன்றாய்ச் சேர்ந்து போகிறார்களாம். பகிரங்கமாக ஊர் சுற்றுகிறார்களாம். கொஞ்சம் கூட நன்றாக இல்லை. சூரியாவுக்கு ஏன் இப்படிப் புத்தி போக வேண்டும்? அவன் தாயார் தகப்பனாருக்குத் தெரிந்தால் எவ்வளவு கஷ்டப்படுவார்கள்?'' என்று ராகவன் சொல்லியிருந்தான்.

அது பிசகான காரியம் என்றுதான் சீதாவுக்குத் தோன்றியது. ஆனால் ராகவன் சூரியாவின் பேரில் பழியைப் போட்டான். சீதாவோ தன் மனத்திற்குள் தாரிணியைக் குறை கூறினாள். 'சூரியா கிராமத்திலிருந்து வந்த அறியாப் பையன். அவனை உலக அனுபவமுள்ள தாரிணிதான் கெடுத்துக்கொண்டிருக்கிறாள்' என்று எண்ணினாள். சூரியாவைத் தனியாகச் சந்திக்கும்போது 'தாரிணியின் வலையில் விழவேண்டாம்!' என்று எச்சரிக்கை செய்யவும் உத்தேசித்திருந்தாள்.

தாரிணியின் விஷயத்திலோ சீதாவின் மனோபாவம் இரண்டு விதமாக இருந்தது. அவளை நேருக்கு நேர் சந்திக்கும்போதெல்லாம் தன்னை மீறிய அன்பும் அபிமானமும் அவள் பேரில் ஏற்பட்டது. அவள் தன்னுடைய தமக்கை – அதாவது மாற்றாந்தாயின் மகள் – என்பதாக ஏற்பட்டிருந்தால் அவளுக்குச் சந்தோஷமாகவே இருந்திருக்கும். அவ்விதம் இல்லாமல்

போயிற்றே என்று சீதாவுக்கு ஏமாற்ற மாயிருந்தது.

ஆனால் தாரிணி இல்லாத சமயத்திலோ அவள் பேரில் அகாரணமாகக் கோபம் வந்தது. குழந்தை வயதில் தன்னுடைய வீட்டில் குடி கொண்டிருந்த வறுமைக்கும் தன்னுடைய தாயார் துயரத்துக்கும் அகால மரணத்துக்கும்கூட அவளே காரணம் என்று தோன்றியது. அப்புறம் தன்னுடைய கணவரை ஏற்கெனவே தெரிந்தவளாயும், அவருடன் கூச்சமின்றிப் பழகக் கூடியவளாயும் இருக்கிறாள். இப்போதோ, சூரியாவை அடியோடு பைத்தியமாக அடித்திருக்கிறாள். இந்தியப் பெண்குலத்தின் பண்புக்குத் தகுந்த நடவடிக்கைகளா இவை? தாரிணியை நினைக்கும்போது, தாமாவும் பாமாவும் எவ்வளவு நல்லவர்கள்? அவர்கள் கொஞ்சம் அதிகமாகவே ஐரோப்பிய நாகரிகத்தில் மூழ்கியிருந்தாலும் அதனால் என்ன? அவர்களுடைய நடத்தை எவ்வளவு மேலானது? ஒரு கொள்கையை உத்தேசித்து, அவர்கள் இன்னும் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்கிறார்களே அது எவ்வளவு மேலான காரியம்? — நமக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, இந்தச் சகோதரிகளின் நடை உடை பாவனைகளைக் கற்றுக் கொள்ள வேண்டியதுதான். வைசராய் மாளிகைத் தோட்டத்தில் நடந்த 'பார்ட்டி'யில் இவர்கள் எவ்வளவு சகஜமாக எல்லாருடனும் பேசிப் பழகினார்கள்? அப்படிப் பழகுவதற்குத் தானும் கற்றுக் கொள்ள வேண்டும். தனக்கு என்னமோ இதெல்லாம் அவ்வளவாகப் பிடிக்கவில்லைதான். ஆனால் கணவருக்குப் பிடிக்கிற காரியங்களை தனக்கும் பிடிக்குமாறு செய்து கொள்ள வேண்டு மல்லவா? இப்படித்தானே தன் மாமியார் கூட அடிக்கடி போதனை செய்து கொண்டு வருகிறார்? — தாமாவும் பாமாவும் இந்த ஊரிலேயே தங்கி விட்டால் மிகவும் சௌகரியமா யிருக்கும்...

இத்தகைய மன நிலையை அடைந்திருந்த சீதா, தாமாவையும் பாமாவையும் பார்த்து, "நீங்கள் இந்த ஊரிலேயே தங்கி விட்டால் எனக்கு எவ்வளவோ சந்தோஷமாக இருக்கும். எனக்கு இங்கே சிநேகிதமே இல்லை. பொழுது போவது கஷ்டமாக இருக்கிறது!" என்று சொன்னாள்.

"ஒருவேளை சீக்கிரம் இந்த ஊருக்கு வந்தாலும் வந்து விடுவோம் சீதா! அப்பாவுக்கு இந்திய சர்க்காரில் பெரிய உத்தியோகம் ஆகும் போலிருக்கிறது. அழைப்பு வந்து விட்டது. அப்பாதான் ஒப்புக்கொள்ளத் தயங்கிக்கொண்டிருக்கிறார்!" என்றாள் பாமா.

"உனக்குச் சிநேகிதத்துக்கு என்ன குறைவு சீதா! தாரிணிதான் இருக்கிறாளே!" என்றாள் தாமா.

"தாரிணி சிநேகிதமா யிருப்பதும் ஒன்றுதான்; சிநேகிதம் இல்லாமலிருப்பதும் ஒன்றுதான். அவள் வந்தால் ஏதாவது சோஷலிஸம், காங்கிரஸ், புரட்சி என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். எனக்கு அதெல்லாம் பிடிப்பதேயில்லை" என்றாள் சீதா.

"அப்படியா சொல்கிறாய்? உனக்கும் அந்த மாதிரி விஷயத்தில் கொஞ்சம் கிறுக்கு உண்டு என்றல்லவா நினைத்தேன்?"

"கிடையவே கிடையாது. எனக்கும் காந்தி மகாத்மாவிடம் கொஞ்சம் பக்தி உண்டு. அவரை யாராவது குறை சொன்னால் எனக்குப் பிடிக்காது. என் அகத்துக்காரர் காந்தியைப் பற்றிக் குறை சொன்னால் கூட அவருடன் சண்டை பிடிப்பேன்!" என்றாள் சீதா.

"காந்தி பெரிய மகான்தான்; சந்தேகமே இல்லை. ஆனால் அவருடைய பொருளாதாரக் கொள்கைகள் சுத்த மோசம். அவர் சொல்கிறபடி எல்லாரும் கேட்டால் இந்தியா இரண்டாயிரம் வருஷங்கள் பின்னால் போய்விடும்!" என்றாள் தாமா.

"ரயில், மோட்டார், எலெக்ட்ரிக் விளக்கு — இதெல்லாம் இல்லாமல் இனிமேல் நம்மால் வாழ்க்கை நடத்த முடியுமா?" என்றாள் பாமா.

"அடடா! அன்றைக்கு வைஸ்ராய் தோட்டப் பார்ட்டிக்கு என்னை அழைத்துக்கொண்டு போனீர்களே, அங்கே செடிகளுக்குள்ளே விளக்கு போட்டிருந்தது எவ்வளவு அழகா யிருந்தது! 'இதுதான் கந்தர்வ லோகமோ' என்று எனக்குத் தோன்றிவிட்டது!"

"நீ பார்த்த பார்ட்டி என்ன பிரமாதம் சீதா! அடடா! வில்லிங்டன் வைஸராயாக இருந்தபோது நீ பார்த்திருக்க வேண்டும். அப்போது வைஸராய் மாளிகையில் பார்ட்டி என்றால் 'கந்தர்வ லோகமா?' என்று சந்தேகப் பட வேண்டி யிராது! நிஜமான கந்தர்வ லோகமாகவே இருக்கும். இந்தக் காலைமாட்டு வைஸராய் வந்த பிறகு முன்மாதிரி அவ்வளவு ஜோர் இல்லை. பார்ட்டிகளும் அடிக்கடி நடப்பதில்லை. லார்ட் லின்லித்கோவுக்குக் 'காலைமாட்டு வைஸராய்' என்பதாகப் பெயர் ஏற்பட்டிருக்கிறதே, உனக்குத் தெரியுமோ இல்லையோ?" என்று தாமா கேட்டாள்.

AIKIDO

மங்கிய முகத்தில் மகிழ்ச்சி பொங்கிட பாரி மிட்டாய்கள்

எத்தகைய மன நிலையையும் மாற்றிட வல்லது பாரி மிட்டாய். புதிய, முழுமையான, சுவை மிகுந்தவை பாரி மிட்டாய்கள். அதன் முதல் சுவையே தனி இன்பம்.




பாரிஸ்
கன்பெக்ஷனரி
லிமிடெட்;
சென்னை

PRS/6544

''தெரியாமல் என்ன? எல்லாருந் தான் அதைப் பற்றிப் பரிகாசம் செய்கிறார்களே?'' என்றாள் சீதா.

''வர வரக் காலம் கெட்டுப் போய் விட்டது. சீமையில் காலை மாடு வளர்க்கிறவர்கள், பன்றி மந்தை வளர்க்கிறவர்கள் எல்லாரையும் பிடித்து இந்தியாவுக்குக் கவர்னர்களாகவும் வைஸ்ராய்களாகவும் அனுப்பி விடுகிறார்கள்'' என்று பாமா சொல்வதற்குள் தாமா குறுக்கிட்டு, ''இப்போதாவது இந்த மட்டில் இருக்கிறது. இங்கிலாந்திலே லேபர் கவர்ன்மெண்ட் வந்துவிட்டால் ரயில்வே போர்ட்டர்களையும் தபால் பியூன்களையும் பிடித்துக் கவர்னர்களாக அனுப்பி விடுவார்கள். அவர்களுக்கு நம்முடைய தேசத்து மகாராஜாக்களும் நவாபுகளும் சலாம் போட்டுக் கொண்டிருக்க வேண்டியது தான்!'' என்றாள்.

அதற்குப் பாமா, ''சீமையிலிருந்து போர்ட்டர்களும் தபால் பியூன்களும் வருவது என்ன? நம் தேசத்துக் காங்கிரஸ்காரர்களும் சோஷலிஸ்டுகளும் சொல்கிறபடி நடந்தால் நம் ஊர் ரயில்வே போர்ட்டர்களும், தபால் பியூன்களுமே கவர்னர்களாக வந்து விடுவார்கள்! எது உனக்குத் தெரியாதே, சீதா?'' என்று கேட்டாள்.

சீதாவுக்கு ராஜம்பேட்டைக் கிராமமும், ராஜம்பேட்டை தபால் சாவடியும் நினைவுக்கு வந்தன. தபால்கார பாலகிருஷ்ணன் கவர்னர் வேலைக்கு வந்தால் எவ்வளவு அழகாயிருக்கும் என்று தனக்குள் நினைத்துப் பார்த்துக் கொண்டு சிரித்தாள். இந்தியா தேசத்தில் சர்க்காரும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் இப்போது நடக்கிறபடியே நடப்பதுதான் நல்லது என்று தோன்றியது.

இந்தச் சமயத்தில் சூரியாவும் தாரிணியும் உள்ளே வந்தார்கள். தாமாவும் பாமாவும், ''ஹலோ! மை டியர்!'' என்று தாரிணியைக் கட்டிக் கொண்டும் கையைப் பிடித்துக் குலுக்கியும் முகமன் கூறினார்கள். சீதா சூரியாவைக் கொஞ்சம் தனியாக அழைத்துப் போய், ''அம்மாஞ்சி! உன்னிடம் ஒன்று சொல்ல வேண்டும். தாரிணியிடம் உனக்கு என்ன இவ்வளவு சிநேகிதம்? உன் அப்பா அம்மா கேள்விப்பட்டால் என்ன நினைப்பார்கள்? — வீணாகப் பேரைக் கெடுத்துக் கொள்ளாதே! நான் பார்த்து உனக்கு நல்ல பெண்ணாகக் கூடிய சீக்கிரம் கல்யாணம் செய்து வைக்கிறேன்!'' என்றாள்.

சூரியா புன்னகையுடன், ''நல்ல பெண் எங்கே பார்த்து வைத்திருக்கிறாய்? இவர்கள் இரண்டு பேரில் ஒருவரையா?'' என்று கேட்டு, பாமா தாமா இருந்த பக்கம் பார்த்தான்.

''சீச்சீ! இவர்கள் இரண்டுபேருக்கும் உன்னைவிட அதிக வயதிருக்கும். இவர்களுடைய நவ நாகரிகத்துக்கும் உன் அம்மாவின் கர்நாடகத்துக்கும் ஒரு நிமிஷம் கூடப் பொருந்தாது. வேறு நல்ல இடம் பார்க்கலாம். நீ மட்டும் தாரிணியின் வலையில் விழாமல் இரு!'' என்றாள் சீதா.

''அத்தங்கா! இந்த மாதிரி யெல்லாம் பேச யாரிடம் கற்றுக்கொண்டாய்? தாரிணியைப் பற்றி உன் மனத்தில் களங்கம் எதுவும் வேண்டாம். நான் தான் முன்னமே சொன்னேனே? நாங்கள் இரண்டு பேரும் சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்கள். அதனால் அடிக்கடி சந்தித்துப் பேச வேண்டியிருக்கிறது. இரண்டு பேரும் சீக்கிரத்தில் லாகூருக்குப் போவதாகக் கூட உத்தேசித்திருக்கிறோம்.''

இதற்குள் தாமா, ''சீதா! அம்மாஞ்சியுடன் என்ன இரகசியம் பேசுகிறாய்? எங்களுக்கு அவரை 'இன்டர்வ்யூ' பண்ணக் கூடாது என்று எண்ணமா? நாங்கள் அவரைக் கடித்து விழுங்கி விட மாட்டோம். இங்கே அழைத்துக் கொண்டு வா!'' என்று கீச்சுக் குரலில் கத்தினாள்.

இதைக் கேட்ட சீதாவும் சூரியாவும் மற்றவர்கள் இருக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

## 25. "கட்டு விடுவேன்!"

சூரியாவைத் தாமாவுக்கும் பாமாவுக்கும் அறிமுகம் செய்து வைத்தவுடனே, ''நாங்கள் வந்தபோது ஏதோ மகாராஜாக்களையும் கவர்னர்களையும் போர்ட்டர்களையும் பியூன்களையும் பற்றிப் பேச்சு நடந்து கொண்டிருந்ததே! அது என்ன விஷயம்?'' என்று சூரியா கேட்டான்.

சீதா விஷயத்தைச் சொன்னாள்.

''அப்படியெல்லாம் ஒரு நாள் வரத்தான் போகிறது. ரயில்வே போர்ட்டர் கவர்னர் ஆவார். தொழிற்சாலை மேஸ்திரி கவர்னர் ஜெனரல் ஆவார். தபால்காரர் பிரதம மந்திரியாவார். இதற்கெல்லாம் நாம் தயாராயிருக்க வேண்டும். இங்கிலீஷ் படித்தவர்களும் பெரிய மனிதர்களுமே எப்போதும் பெரிய உத்தியோகங்களில் இருப்

பார்கள் என்று நினைக்காதீர்கள். இன்று ஜெர்மனியைக் கண்டு உலகமே நடுங்கும் படி செய்திருக்கும் ஹிட்லர் யார்? சுவருக்குச் சுண்ணாம்பு வர்ணம் பூசிக் கொண்டிருந்தவன். ஜெர்மனியில் ஆயிரம் வருஷங்களாக அரசு புரிந்து வந்த ஆளும் இனத்தார் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டார்கள். ருஷியா தேசத்தின் விஷயம் என்ன...?'' என்று சூரியா பேசிக் கொண்டே போனான்.

''அடே, அப்பா! இவர் என்ன நெருப்பு கக்கும் சோஷலிஸ்ட் போல் இருக்கிறதே!'' என்றாள் பாமா.

''ஆமாம்; அம்மாஞ்சி பெரிய தீவிர வாதி. கிராமத்திலுள்ள நில விஷயத்தில் குடியானவர்கள் கட்சி பேசி, அப்பாவுடனும் அண்ணாவுடனும் சண்டை போட்டுக் கொண்டு வந்துவிட்டான்! பொதுக் கூட்டங்களில் பிரமாத ஆவேசத்துடன் பேசுவானாம்! ஆனால் நான் இதுவரையில் கேட்டதில்லை'' என்றாள் சீதா.

''என்னை நெருப்பைக் கக்கும் சோஷலிஸ்ட் என்றுதானே சொன்னீர்கள்? அது உண்மைதான். எங்கள் கட்சி மூட்டும் நெருப்பு இந்தியா தேசத்திலுள்ள மகாராஜாக்கள், திவான்கள், ஜமீன்தார்கள், ஜாகீர்தார்கள், ஏழைப் பாட்டாளிகளைப் பிழிந்தெடுத்துக் கொள்ளை லாபம் அடிக்கும் முதலாளிகள் எல்லோரையும் கொளுத்திப் பொசுக்கிக் கூண்டோடு கைலாசம் அனுப்பி வைக்கப் போகிறது. கொஞ்ச நாளில் பாருங்கள்!'' என்றான் சூரியா.

''மகாராஜாக்களும் ஜமீன்தார்களும் போனால் போகட்டும்! பாவம், ஏழைத் திவான்களைச் சும்மா விட்டு விடுங்கள். பிழைத்துப் போகட்டும்!'' என்று பரிகாசக் குரலில் கூறினாள் பாமா.

''இவ்வளவெல்லாம் பேசுகிறீர்களே? உங்களுடைய எரிமலை கக்கும் நெருப்பினால் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அரசாங்கங்கூட எரிந்து போய்விடுமா?'' என்று பாமா கேட்டாள்.

''பிரிட்டிஷ் அரசாங்கமும் ஒரு நாள் அழியத்தான் போகிறது. இப்போதைக்கு இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் 'அஸ்பெஸ்டாஸ்' கவசம் போட்டுத் தப்பித்துக் கொண்டு வருகிறது. ஆனால் இது வெகு காலம் நிற்காது. கூடிய சீக்கிரத்தில் இந்திய அதிகார வர்க்கத்துக்கும் காலம் வரும்!'' என்றான் சூரியா.

''அது என்ன 'அஸ்பெஸ்டாஸ்' கவசம்? இது வரையில் நான் கேட்டதில்லையே?'' என்றாள் சீதா.

''அஸ்பெஸ்டாஸ் என்று ஒரு புதிய செயற்கைப் பொருளைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதை நெருப்பு எரிக்காது; நெருப்பே பிடிக்காது. பிரிட்டிஷார் அத்தகைய அஸ்பெஸ்டாஸ் கவசம் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். அது என்ன தெரியுமா? அதுதான் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் உள்ள வேற்றுமை. இந்துக்களையும் முஸ்லிம்களையும் பிரித்து வைத்துத்தான் பிரிட்டிஷார் இந்தியாவை ஆளுகிறார்கள்!''

''அந்தப் பிளவு எப்படி நீங்கும்?'' என்று தாமா கேட்டாள்.

''பிளவு நீங்குவதற்கு வழி பொருளாதாரப் புரட்சிதான். ஏழைகளில் இந்து ஏழை என்றும் முஸ்லிம் ஏழை என்றும் கிடையாது. பாட்டாளிகளிலும் அப்படியே. இந்த விஷயத்தை இரண்டு சமூகங்களையும் சேர்ந்த ஏழைகளுக்கும் பாட்டாளிகளுக்கும் தெரியப்படுத்தி விட்டால், அவர்கள் விழித்துக்கொண்டு விடுவார்கள். பதவிப் பித்துக்கொண்ட அரசியல்வாதிகளும் பிரிட்டிஷ் இராஜ தந்திரிகளும் தங்களை உபயோகித்துக் கொள்ள இடங் கொடுக்க மாட்டார்கள்'' என்றான் சூரியா.

பெரியவர்களுடைய பேச்சையெல்லாம் விஷயம் புரியாவிட்டாலும் ஆவலோடு கேட்டுக் கொண்டிருந்த வஸந்தி, ''அப்பா வந்துத்தா! அப்பா வந்துத்தா! பாத்திலை அச்சிண்டு வந்துத்தா!'' என்று சொல்லிக் குதித்துக் கொண்டே வாசற் பக்கம் ஓடினாள்.

சீதா, ''ஆமாம்; இவர்தான் வந்து விட்டார் போலிருக்கிறது. நீங்கள் சற்றுப் பேசிக் கொண்டிருங்கள். நான் போய் அழைத்துக் கொண்டு வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு வாசற் பக்கம் விரைந்து சென்றாள். குழந்தையைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு வீட்டின் முகப்புத் தாழ்வாரத்தில் நின்றாள்.

வண்டி வந்து வீட்டு வாசலில் நின்றது. தாயார் இறங்குவதற்கு முன்னாலே ராகவன் அவசரமாக இறங்கி வந்தான். முகப்புத் தாழ்வாரத்தில் நின்ற சீதாவை நெருங்கி, ''சீதா! ஊருக்கு எதற்காக அப்படிக் கடிதம் எழுதினாய்! ஒரு நாளைக்கு உன்னை நன்றாய் அறைந்து விடப் போகிறேன். திமிர் அதிகமாகி விட்டது! தடிக் கழுதை!'' என்று சீறும் குரலில் கூறினான்.

''ஐயோ! இது என்ன? நான் ஒன்றும் எழுதவில்லையே?'' என்றாள் சீதா. பொங்கி வந்த அழுகையையும் ஆத்திரத்தையும் அடக்கிக் கொண்டாள். இவ்வளவு கோபமாகவும் ஆபாசமாகவும் ராகவன் சீதாவைத் திட்டியது இதுதான் முதல் தடவை.

மனதிற்குகந்த
தூய வெண்மையைப் பெற

# ஓ ஓ பி ® நீலம்

ஓ ஓ பி நீலம் உடனடியாக முற்றிலும் கரைந்துவிடும் வெள்ளைத் துணிகள் ஒரே சீராக பால்போல் பளிச்சிடுகின்றன. உங்கள் சட்டைகள், புடவைகள், பெட்ஷீட்டுகள் மற்ற துணிகள் எதையும் வெள்ளை வெளேர் என்று ஆக்க மிகவும் சிக்கனமான வழி இது. நீலப்புள்ளி விழாது, மஞ்சள் திட்டு தெரியாது.

ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவுத் தயாரிப்பு. இந்தியாவின் மிக நவீன அல்டிராமரைன் தொழிற்சாலையில் உருவானது






தயாரிப்பாளர்:
அல்டிராமரைன் & பிக்மென்ட்ஸ்
லிமிடெட், அம்பத்தூர், சென்னை 53

UPL/6546

''நீ எழுதவில்லையா? பொய் சொல்லாதே ! ரஜனிப்பூர் ஏரியில் உன்னை நான் படகிலிருந்து பிடித்துத் தள்ளி விட்டதாகக் கடிதம் எழுதவில்லையா உன் சிநேகிதி லலிதாவுக்கு.....?''

சீதாவுக்கு உண்மை புலனாயிற்று. சூரியா லலிதாவுக்கு எழுதிய விஷயம் இப்படி இவர் காதுக்கு எட்டியிருக்கிறது. யாரோ தன் மாமியாரிடம் ஊரில் பிரஸ்தாபித்திருக்கிறார்கள். ரயிலிலிருந்து இறங்கியதும் இறங்காததுமாக மாமியார் அதை இவரிடம் சொல்லியிருக்கிறார்! முதல் முதலாக, சீதாவுக்கு அப்போதுதான் தன் மாமியார் மீது கோபம் உண்டாயிற்று.

'' என் பதில் சொல்லாமல் விழித்துக் கொண்டு நிற்கிறாய்? எழுதினாயா ? இல்லையா?'' என்றான் ராகவன்.

ஒரு கண நேரம் சீதா யோசனை செய்தாள். தான் எழுதவில்லை என்றும் தாரிணி கூறியதைக் கேட்டுச் சூரியா எழுதினான் என்றும் சொல்லலாம். அப்படிச் சொன்னால் சூரியா மீது இவருக்கு அசாத்தியக் கோபம் வரும். அதைக் காட்டிலும் தான் குற்றத்தை ஒப்புக் கொண்டுவிடுவதே நல்லது !

'' நான் அப்படியெல்லாம் ஒன்றும் எழுதவில்லை.....'' என்று சமாதானம் சொல்ல ஆரம்பித்தாள்.

'' அப்படி எழுதவில்லை.... இப்படி எழுதினாயாக்கும்! உன்னுடைய துஷ்டத்தனம் இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. ஒரு நாளைக்கு உன்னை நிஜமாகவே ஏரியில் பிடித்துத் தள்ளிவிடுகிறேன், பார் !''

''வேண்டாம்! வேண்டாம்! இரைந்து பேசாதீர்கள்! உங்களுக்குப் புண்ணியமாகப் போகட்டும். குழந்தை என்னமோ ஏதோ என்று திக்பிரமை அடைந்திருக்கிறாள். உள்ளே யார் யாரோ வந்திருக்கிறார்கள்!'' என்றாள் சீதா.

ராகவனுக்குச் சட்டென்று புத்தி தெளிந்தது. '' உள்ளே யார் வந்திருக்கிறார்கள்?'' என்று கேட்டான்.

''தாரிணி வந்திருக்கிறாள்....''

''ஓஹோ !'' என்றான் ராகவன். உடனே அவன் முகத்தில் மாறுதல் காணப்பட்டது.

'' தாமாவும் பாமாவும் வந்திருக்கிறார்கள்.....''

'' அந்தச் சனியன்களும் வந்திருக்கிறார்களா ?.... அதுதான் இவ்வளவு கொம்மாளம் போகிறது! வந்திருப்பவர்கள் அவ்வளவுதானா ? இன்னும் யாராவது உண்டா ?'' என்று ராகவன் கேட்டான்.

''சூரியாவும் வந்திருக்கிறான்....''

''அந்த ராஸ்கல் இங்கு எதற்காக வந்தான்? ஒரு நாளைக்கு அவனை ரிவால்வரால் சுட்டுக் கொன்றுவிடப் போகிறேன் !'' என்று முணுமுணுத்தான் ராகவன்.

சீதா அடைந்த மன வேதனைக்கு அளவேயில்லை. திடீரென்று இத்தகைய ராட்சஸ சுபாவம் இவருக்கு எங்கேயிருந்து வந்தது என்று திகைத்தாள். இந்தச் சமயத்தில் காரிலிருந்து சாவகாசமாக இறங்கி வேலைக்காரன் சாமான்களையெல்லாம் எடுத்துவிட்டானா என்று பார்த்த பிறகு, வீட்டுப் படி ஏறி வந்த காமாட்சி அம்மாள், ''ராகவா! இது என்ன, நான் வந்ததும் வராததுமாய் நீங்கள் சண்டை பிடிக்க ஆரம்பித்து விட்டீர்கள்? உங்களுடைய சண்டையைப் பார்த்துவிட்டு நான் திரும்பிப் போய்விட வேண்டும் என்ற எண்ணமா? அதெல்லாம் நான் போகமாட்டேன் — என் பேத்தியை விட்டுவிட்டு. வஸந்தி ! இங்கே வா, அம்மா !'' என்றாள்..

அப்பா – அம்மா சண்டையைப் பார்த்துத் திகைத்த வஸந்தி பாட்டியிடம் தாவிச் சென்றாள். (தொடரும்)

மாதம் ஒன்று, இரண்டு, மூன்று மெல்ல கவிழ்ந்து படுக்கும் நன்று

# மாதம் நான்கு ஐந்து, ஆறு
# மெதுவாத் தவழ்ந்து உதைக்கும் பாரு

மூன்றுவது மாதத்திலிருந்து உங்கள் குழந்தைக்குப் பால் மட்டும் போதாது. சீரான உடல் வளர்ச்சிக்கு உங்கள் குழந்தைக்குத் தேவை பாரெக்ஸ்...அதன் முதலாவது திட உணவு. குழந்தையின் மென்மையான ஜீரணத்திற்கு ஏற்ற சரியான புரதச் சத்து கொண்டது பாரெக்ஸ்.

குழந்தைக்கு எத்தனை சீக்கிரம் திட உணவு கொடுக்க ஆரம்பிக்கிறீர்களோ அத்தனை நல்லது என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். குழந்தையின் சீரான வளர்ச்சிக்கு வேண்டியவசியமான புரதச் சத்துடன், கார்போ ஹைட்ரேட்டுகள், கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் மற்றும் தாது உப்புகள் யாவும் அடங்கியது பாரெக்ஸ். பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற 25 பைசா தபால் தலையை இணைத்து, டிபார்ட் மெண்ட் K-1-P த.பெ. 16558, பம்பாய் 18 டபிள்யூ பி. என்னும் முகவரிக்கு எழுதுக. (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

**சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு.**




# பாரெக்ஸ்® – க்ளாக்ஸோ தயாரிப்பு

CMGF-21R-203 Tam

# தியாகச் சுடர்

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

'வந்தேமாதரம்'

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பாரத நாடெங்கும் முழங்கத் தலைப்பட்டது இந்த வீர வாசகம். வங்காளத்தை இரண்டாகப் பிரிட்டிஷ் அரசாங்கம் பிரித்தவுடனே, அங்கே கிளர்ந்தெழுந்த எதிர்ப்புப் புயல் நாடெங்கும் சுழன்று வீசியது. அதன் நிரக்குரலாக அமைந்தது 'வந்தேமாதரம்'. ஆங்கில ஆட்சி பீடத்தை இது வெருள வைத்தது. இந்தக் கோஷத்தையே ராஜத் துரோகம் என்று ஆங்கிலேயன் கருதினான். அதைப் போடப்படாது என்று தடை செய்தான். 'போடப்படாதா ? 'வந்தேமாதரம்' என்று வாய் நிறைய, உள்ளம் நிறையச் சொல்லப் படாதா? அதற்குக்கூடவா எங்களுக்கு உரிமையில்லை?' என்று பாரதியார் பாடினார் :

'வந்தே மாதரம் என்போம் - எங்கள்
மாநிலத் தாயை வணங்குதும் என்போம்'

'யாரடா, நீ யாரடா சொல்லக் கூடாது என்று சொல்லுவதற்கு ? சொல்லத்தான் சொல்லுவோம்,

ஆயிரம் உண்டிங்கு சாதி - எனில்
அந்நியர் வந்து புகலென்ன நீதி ?...
வந்தே மாதரம் என்போம்.

என்போம், என்போம், என்போம்' என்று கவிதைத் தமிழ் அதிர்ந்தது. பாரதம் முழுதும் பற்றிய சுதந்திரக் கனல் தமிழ் உள்ளத்திலும் எரிந்தது என்பதற்கு இந்தப் பாடல் அத்தாட்சி. அதன் குரலாகப் பாரதியார் நின்றார் என்றால் அதை வளர்த்த வீரக் கரமாகத் தமிழ் நாட்டில் நின்ற பெருமை வ. உ. சிதம்பரம் பிள்ளையைச் சாரும்.

வங்கத்தில் நடைபெற்ற முறையைப் பின்பற்றி, தூத்துக்குடியிலும், இளைஞர் சங்கங்களை அமைத்து, தேசபக்தித் தீயை வ.உ.சி. வளர்த்தார். அரசைப் பக்கபலமாகக் கொண்டு, நமது நாட்டை ஆங்கில வணிகம் சுரண்டி வந்தது என்பதை உணர்ந்தார்:

"பொழுதெல்லாம் எங்கள் செல்வம் கொள்ளை
போகவோ - நாங்கள் சாகவோ (கொண்டு)
அழுதுகொண் டிருப்போமோ ஆண்பிள்ளைகள்
அல்லமோ உயிர் வெல்லமோ ?"

இந்த வேகத்தில் சுதேசி நீராவிக் கப்பல் கம்பெனி ஒன்றை வ. உ. சி. நிறுவினார். ஆங்கிலக் கம்பெனியோடு ஏற்பட்ட போட்டியில், வ.உ.சி.யால் தாக்குப் பிடிக்க இயலவில்லை. பெரும்பாலான மக்களுக்குச் சுதேசியம் என்பதன் பொருள் முழுவதும் விளங்காத காலம் அது.

'உப்பென்றும் சீனியென்றும்
உள்நாட்டுச் சேலையென்றும்
செப்பித் திரிவாரடி - கிளியே
செய்வ தறியாரடி'

செய்வதறிந்தவர் வ. உ. சி. ஆனும், ஏதோ ஒப்புக்குத் தலையசைத்து, வ. உ. சி.யின் முயற்சியில் பணம் முடக்கிய பணக்காரர்களுக்கு, தங்கள் முதல் போய்விடுமோ என்று கவலை. இதனால் கம்பெனி நிர்வாகத்தில், செயற்பாட்டில் குழப்பம் நேர்ந்தது. அந்நியனுடைய அகரப் போட்டி ஒருபுறம், தமக்குத் துணை நிற்க வந்தவர்களுடைய பூசல் மறுபுறம், இரண்டுமாகச் சேர்ந்து வ.உ.சி.யை வதைத்தன. நெஞ்சு தளராமல், மக்களைத் திரட்டுவதற்கு முனைந்தார். சுப்பிரமணிய சிவா என்ற பிரம்மசாரியோடு சேர்ந்து, தூத்துக்குடியிலும், திருநெல்வேலியிலும் பற்பல பொதுக் கூட்டங்களைக் கூட்டி, சுதந்திர இலட்சியத்தை மக்கள் நெஞ்சிலே நட்டினார். சுரண்டலை எதிர்க்க, தூத்துக்குடி கோரல் மில் தொழிலாளருக்கு வழிகாட்டினார். ஸ்வராஜ்யம் அடைந்தே தீர வேண்டும் என்று முழக்கினார். அரசாங்கம் கூட்டங்களைத் தடை செய்தது. தடையா, தீரத்துக்கும், தேசபக்திக்கும் தடை உண்டா ? தடையை மீறினார். இதற்காக, 1908-ம் ஆண்டில் ராஜத்துரோகக் குற்றம் சாட்டப்பெற்று, அவர் சிறை சென்று, செக்கிழுத்தது நாடறிந்த வீர வரலாறு.

முதலில், ஆயுள் தீவாந்தர தண்டனை அவருக்கு விதிக்கப் பெற்றது. பிறகு ஆறு ஆண்டுகளாக அது குறைக்கப் பெற்றது. அதன் பிறகு, தீவாந்தரம், கடுஞ் சிறைத் தண்டனையாக மாறியது. ஆயினும் என்ன ? அக்காலத்துக் கடுஞ்சிறைக் கொடுமையை எண்ணிப் பார்த்தாலும் இப்போது நெஞ்சு



கலங்கும். தமிழ்நாட்டின் தலைவராக நின்ற வ. உ. சி. சிறையில் அனுபவித்த உடல் வேதனை சொல்லின் எல்லை கடந்தது. பண் பார்த்த அவருடைய உள்ளம் அடைந்த சோதனையோ சொல்லத் தரமன்று. ஐந்து ஆண்டுகள் இந்த நரகத்தில் உழன்றபின், அவர் வெளிவந்தபோது, அவரை வரவேற்க யாருமில்லை. தோளோடு தோள் நின்று உழைத்த எவரையும் காணேனும். நாட்டிலே மயான அமைதி குடிகொண்டது. 1910ம் ஆண்டில் சிறையிலிருந்து வெளிவந்தபோது ஸ்ரீ அரவிந்தர் வங்காளத்தில் கண்ட இருண்ட நிலைதான் தமிழகத்திலும் சிறிது காலம் உருவாகி'யிருந்தது.

'என்னைச் சுற்றிப் பார்த்தேன், தேடினேன்' என்று இந்த அவல அனுபவத்தைச் சொல்லத் தொடங்கினார் அரவிந்தர். 'ஆனால் அறிவுரை கூறவோ, உள்ளத்துக்கு உயிரூட்டவோ எனக்கு இருந்த பழைய நண்பர்கள் ஒருவரையும் காணவில்லை. இது மட்டுமா? நான் சிறைக்குப் போனபோது, நாடு முழுவதும் 'வந்தேமாதரம்' என்ற மந்திரத்தின் உயிர்த் துடிப்பு துள்ளியது. அடிமை என்ற துச்ச நிலையிலிருந்து தலை தூக்கிய கோடிக்கணக்கான மக்களுடைய நீரத்தின் சங்கநாதம் எங்கும் அதிர்ந்தது. சிறையிலிருந்து வெளிவந்ததும் அந்தக் குரலைச் செவிமடுக்க, ஆசையோடு திரும்பினேன். ஆனால் மோனமே என்னை எதிர்கொண்டது. நாடு முழுதும் பயங்கரமான சாக்காட்டு அமைதியே நிலவியது. என்ன செய்வது என்று தெரியாமல் மக்கள் திகைத்து நின்றனர். எந்தத் திசையை நோக்கி நடப்பது என்று யாருக்கும் தெரியவில்லை.'

அரவிந்தர் வருணிக்கும் இந்த நிலைதான் தமிழ் நாட்டில் வ. உ. சி.யை வரவேற்றது. ஆனால் எந்தத் திசையை நோக்கி நடப்பது என்பது அவருக்குத் தெரியாமல் இல்லை. சுதந்திர தாகத்தை, அதன் விளைவாக நாட்டிலே உருவாகிய தன்னம்பிக்கையை, ஆண்டவன் அல்லவா அருளினான் என்று வ.உ.சி. நினைத்தார். அவன் மறுபடியும் அவற்றை வளர்க்காமலா இருப்பான்? பொறுப்போம் என்று முடிவு செய்தார். நம்பிக்கை தளரவில்லை, உறுதி குலையவில்லை, தேசபக்தி அணையவில்லை. இவை செயற்படும் காலத்தை இறைவன் விரைவில் அருள்வான்.

'கட்டுண்டோம், பொறுத்திருப்போம், காலம் மாறும்' என்று, காலத்தையும் மாற்றலாம் என்ற துணிவோடு, தன்னையும், பிறரையும் தேற்றினார். அந்த நேரம் வரும் வரையில் பிறர் கையை எதிர்பாராமல் வாழ வேண்டுமே, அதற்காகச் சிறு ஊதியம் பெறத் தமது பழைய தொழிலை மேற்கொண்டார். நாட்டிலே மயான மோனம் நிலவியது. அதனால் என்ன? சிறையிலேதான் மோனத்தின் கொடுமையோடு போராடிப் போராடி, ஈடு கொடுத்தவர் ஆயிற்றே. இப்போதும் அதே பொறுமையோடு, குறை கூறாமல், முணங்காமல், இலக்கியப் பணி, சமய ஆய்வு இவற்றிலே ஆழ்ந்தார். 'இன்னபடி என்றெழுதிவிட்ட சிவனும் செத்துவிட்டானோ? பாரம் அவனுக்கன்றோ?' என்று எண்ணிச் சில காலம் இருந்தார். சுதந்திரக் கனலை மூட்டியாகிவிட்டது; இப்போது ஏதோ சிறிது தணிந்து எரிகிறது; மறுபடியும் இறைவன் அருளால், அது ஓங்கி, வானளாவும் என்று உறுதியோடு நின்றார்.

## ஜோதிக்கு முதலிடம்



சமீபத்தில் தமிழ்நாடு என்ஜினீயரிங் கல்லூரி அட்மிஷனுக்காக நடந்த நேர்முகத் தேர்வில் சுமார் மூவாயிரத்து ஐந்நூறு பேர்கள் கலந்து கொண்டார்கள். இந்தத் தேர்வில் திருச்சி ஆர். எஸ். கே. ஹையர் செகண்டரி பள்ளியில் படித்த குமாரி ஜோதி அதிக மதிப்பு எண் பெற்று முதல் இடம் பெற்றார்.

தந்தை திரு அருணாசலம் வடநாட்டில் ஜோத்பூரில் பணியாற்றும்பொழுது இவர் பிறந்ததால் ஜோதி என்று பெயர் வைத்தார்.

குமாரி ஜோதி பூனா, பம்பாய், கௌஹாத்தி, கல்கத்தா ஆகிய நகரங்களில் ஆங்கிலப் பள்ளிகளில் படிக்கும்பொழுதே பள்ளியில் முதல் மாணவியாகத் திகழ்ந்து தங்கப் பதக்கங்களும், பல பரிசுகளும் பெற்றிருக்கிறார். இவருக்குத் தமிழ், ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகள் எழுதப் படிக்கத் தெரிந்ததுடன் குஜராத்தி, மராட்டி, உருது போன்ற மொழிகள் பேசவும் வரும்.

இப்பொழுது கிண்டி என்ஜினீயரிங் கல்லூரியில் படிக்கும் இவர், பெண்களுக்கும் தனியாக ஹாஸ்டல் இருந்தால் இன்னும் அதிகமான பெண்கள் என்ஜினீயரிங் கல்லூரியில் சேர்ந்து படிப்பார்கள் என்கிறார்.

என்ஜினீயரிங் கல்லூரித் தேர்வில் தமிழ் நாட்டில் ஒரு பெண் முதல் இடம் பெறுவது இதுதான் முதல் தடவை.

—சாந்தி

அவருடைய உறுதி பொய்யாகவில்லை. சுதந்திரப் போராட்டக் களத்தில் காந்திஜி தோன்றினார். சுதந்திரம் என்ற பழைய இலட்சியத்தை எட்டிப் பிடிக்க, புதியதொரு போர்முறை உருவாகியது. இத்திட்டத்தின் அடிப்படை, சத்தியமும் அஹிம்சையும், அதன் நடைமுறை, ஒத்துழையாமை. சத்தியத்தில் தளராத நம்பிக்கை உடையவர்தான் என்றாலும் அஹிம்சையும் ஒத்துழையாமையும் ஒரு நாடு முழுதும் வெற்றிகரமாகக் கையாளக்கூடிய ஆயுதங்களா என்று வ. உ. சி. சந்தேகப்பட்டார். பல ஆண்டுகளுக்குமுன்பே, அரவிந்தர், திலகர் இவர்களோடு, புரட்சி, தேவையானால் வன்முறைப் புரட்சி என்ற கொள்கையில் ஊறிய வ.உ.சி. காந்திஜியின் அஹிம்சையில் முதலில் நம்பிக்கை வைக்காமல் இருந்தது வியப்பில்லை. தமது கொள்கைக்காகக் கல்கத்தா காங்கிரஸில் போராடியும் பார்த்தார்; பயனில்லை. 1927-ம் ஆண்டு சேலம் மாநாட்டில் திரும்பவும் தமது கவலையை வெளியிட்டார்.

இந்த நிலையில் வ.உ.சி.க்குப் பெரியதொரு சங்கடம் ஏற்பட்டது. தமது கொள்கைக்காகப் புதிய கட்சி ஒன்றையே நிறுவிப் போராடுவதா, அல்லது காந்திஜி கொணர்ந்த புதிய திட்டத்துக்கு வழிவிட்டு விலகுவதா என்பதே வ. உ. சி.யை எதிர்கொண்ட சோதனை. தம்முடைய தனிச் செல்வாக்கு, தியாகத்தால் தமிழ்நாட்டில் தாம் தேடிக் கொண்ட தனித் தலைமை, இவற்றைப் பாதுகாத்துக் கொள்ள அவர் முயன்றிருக்கலாம். ஆனால் அந்தக் குருட்டுச் செருக்கும், குறுகிய தற்பெருமையும் தன்னலமும் அவரிடம் இல்லை. தமிழ்நாட்டு அரசியல் – தலைமையில் இருந்து தாமே விலகிக் கொண்டார். அரசியல் உலகில் புதிய சக்திகள் இயங்குவதைத் தடை செய்யாமல் பூசலுக்கும், குழப்பத்துக்கும் இடந் தராமல் தனி மனிதரைவிட, நாடே பெரிது என்ற உறுதியோடு, சாதாரண மனிதனாக இறங்குவதை ஏற்றார். நிறைவோடு ஏற்றார். மகாபாரதத்தின் முடிவில் காண்டீவத்தைத் துறந்து, இமயத்தை நோக்கி நடந்த அருச்சுனனைப் போல, தமது வீரப் பெரும் அரசியல் தலைமையைத் தாமே துறந்து, மொழிப் பணியிலும் சமய வாழ்விலும் ஆழ்ந்தார். இதுவே அவருடைய தியாகத்துக்கெல்லாம் மணி முடியாக அமைந்தது.

பாரதத்தின் தெற்கு மூலையில் எங்கோ, நெல்லைச் சீமையைச் சேர்ந்த ஒட்டப்பிடாரம் என்ற ஊரில், வ. உ. சி. பிறந்து நூறு ஆண்டுகள் நிறைவு பெறும் இன்று, பெருமிதத்தோடும், பக்தியோடும் அவருக்கு அஞ்சலி செலுத்த விரும்புகிறோம். தமிழ்நாட்டிலே சுதந்திரச் சுடரை ஏற்றி அணையாமல் காத்த இந்த வீர வடிவத்தை வணங்கி வாழ்த்துகிறோம். சுதந்திரச் சுடரை ஏற்றினரா? ஆம், அதை என்றென்றும் மறவோம். அவரே ஒரு மங்காத தியாகச் சுடராக நின்றார், அதன் ஒளியை என்றென்றும் பின் தொடர்வோம்.

# வெள்ளி விழாவில் கதர்ப்பணி

காந்தி மகாத்மா கதருக்கும் ஏனைய குடிசைத் தொழில்களுக்கும் ஆக்கம் அளித்தார்; சுதேசிப் பொருள்களுக்கு ஊக்கம் அளித்தார். சுதந்திர இயக்கத்துக்கு இந்தக் கிராமப் புனர்நிர்மாணப் பணிகள் வலுவூட்டின.

சுதந்திரம் கிட்டியபின் இப்பணிகள் அருகி விட்டனவோ என்று நினைக்கும் வேளையில், அப்படி இல்லை எனச் சுதந்திர வெள்ளிவிழா ஆண்டில் தெரிய வருகிறது.

விடுதலைப் போராட்டத்துக்குக் கைகொடுத்து உதவிய கதர்ப் பணி தமிழ்க் கதர் - கிராமக் கைத்தொழில் கமிஷன் இவ்வெள்ளி விழா ஆண்டில் ஒரு புது முயற்சியை மேற்கொண்டிருக்கிறது. லட்சம் குடும்பங்களைக் கதர் அணியும் குடும்பங்களாக மாற்றுவதே அதன் நோக்கம். இக்குடும்பங்கள் ஆண்டு ஒன்றுக்கு 60 சதுர மீட்டர்களுக்குக் குறையாமல் கதர் வாங்கும். ஆனால் 200 சதுர மீட்டர்களுக்குமேல் வாங்க முடியாது. இப்படி ஓர் உச்சவரம்பு வைத்திருக்கிறது. அத்துடன் பஞ்சசீலப் பாணியில் ஐந்து அம்சத் திட்டம் ஒன்றும் தொடங்கி நிற்கிறது. இந்தத் திட்டத்தின் கீழ்க் கதர்க் குடும்பம் ஆகிறவர்களுக்கு ஐந்து சதவிகிதம் அதிகப்படி கழிவுத் தொகை அளிக்கப்படும்.



காந்தியடிகளின் இந்தக் கிராம - ராமராஜ்யப் பணிக்குத் தமிழகம் எப்பொழுதும் போல் ஆதரவு அளித்து 'முந்தி விருப்பச் சேவை'ப் புரியும் என்று நம்பலாம். - ரா. வீ.

## ஒன்பதாவது அத்தியாயம்

தொடக்கத்தில் தம்மோடு போட்டியிட்ட அதிகத் தகுதியுள்ள சிலரை வீழ்த்திவிட்டு இந்தப் பதவியைத் தாமே அடைய ஓரளவு அரசியல் செல்வாக்குள்ளவர்களை நாடித் துணைவேந்தர் தாயுமானவனார் போயிருந்தார். அது அவருக்கு வெற்றியைத் தேடித் தந்திருந்தது. பதவிக்கு வந்த பின் அதே அரசியல் செல்வாக்கு விநாடிக்கு விநாடி அவரைத் தேடி வந்து மிரட்டவும், நிர்ப்பந்தப்படுத்தவும் செய்தபோது அவரால் அதிலிருந்து தப்ப முடியவில்லை. எது எப்படி இருந்த போதிலும் அன்று நண்பகலில் பூதலிங்கத்தை வரவழைத்துப் பேசிய பின்னர் 'மாணவர் பேரவைத் தேர்தல் சம்பந்தமாக' இனி எதிலும் தலையிடக் கூடாது என்ற முடிவுக்கு வந்திருந்தார் தாயுமானவனார். நாகரிகமே இல்லாத முரடர்களான கோட்டச் செயலாளர் குருசாமியும், இராவணசாமியும் சொல்வதைக் கேட்டுக் கொண்டு எதையாவது தாறுமாறுகச் செய்து பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் தம்மை முழுமூச்சோடு எதிர்க்கும் சூழ்நிலையைத் தூண்டிவிட அவர் தயாராயில்லை. குருசாமியும், இராவணசாமியும் மாற்றி மாற்றி ஃபோன் செய்தும் ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லி மெல்ல நழுவி விட்டார் துணைவேந்தர். அதே சமயம் அவர்களைப் பகைத்துக் கொள்ளவும் அவர் தயாராக இல்லை. தந்திரமாகப் பேராசிரியர் பூதலிங்கத்தின் தலையில் எல்லாப் பழிகளையும் சுமத்திவிட்டுத் தப்பித்துக் கொண்டார் தாயுமானவனார். பாண்டியன் கடத்தப்பட்டு மீண்டதை ஒட்டி மாணவர்கள் மத்தியில் ஒருவிதமான கொந்தளிப்பும் கோபமும் இருந்ததால் குருசாமியும், இராவணசாமியும் வெளிப்படையாகப் பல்கலைக் கழக எல்லைக்குள் வந்து வேலை செய்யப் பயப்பட்டார்கள். கல்லெறி முதல் பாண்டியன் கடத்தப்பட்டது வரை சகலமும் பத்திரிகைகளில் வேறு வெளிவந்துவிட்டது. மாணவர்களை ஆதரித்து எழுதியிருந்த பத்திரிகைகள் கட்சிக்காரர்களின் தலையீட்டையும் வன்முறைகளையும், துணைவேந்தர் பல்கலைக் கழக எல்லையில் போலீஸைக் கூப்பிட்டதையும் கண்டித்து எழுதியிருந்தன. பாண்டியனின் அறையிலும் வெளியேயும், வராந்தாவிலுமாகக் காவலுக்கு இருப்பதுபோல் நூற்றுக்கணக்கான மாணவர்கள் திரண்டிருக்க ஏற்பாடு செய்திருந்தார் மணவாளன். ஒரு பாதுகாப்புக்காக மோகன்தாஸையும் அதே அறையில் தங்கிக் கொள்ளச் சொல்லியிருந்தார்கள்.

மறுநாள் காலையில் விடிந்தால் மாணவர் பேரவைத் தேர்தல்கள் நடக்க இருந்தன. அந்த இரவும் அதையடுத்து விடிவதற்கிருந்த வைகறையும் மாணவர்களால் ஆவலோடு எதிர்பார்க்கப்பட்டன. எங்கும் அமைதியாயிருந்தாலும், எந்த விநாடியில் என்ன நடக்குமோ என்று எதிர்பார்க்கும் ஓர் ஊமைப்



# சத்திய வெள்ளம்

நா. பார்த்தசாரதி



பரபரப்பு பல்கலைக் கழக எல்லையில் உள்ளடங்கித் தெரிந்தது.

குழப்பங்களை விளைவிக்கவோ, ஏதாவது கலவரம் செய்து தேர்தலைத் தள்ளிப் போடச் செய்யவோ, இனி இயலாது என்ற கையாலாகாத்தனமும், அதனால் உண்டாகிய ஆற்றாமைக் கோபமுமாகத் துடித்துக் கொண்டிருந்தனர் அன்பரசன் குழுவினர். ஆற்றாமை — கையாலாகாத்தனம், பொறாமை இவை எல்லாம் உள்ளவர்களால் இனி இது இயலாது என்று எதிலும் அடங்கி விடவும் முடியாது. கடைசி விநாடி வரை அவர்கள் எதையாவது செய்து கொண்டேதான் இருப்பார்கள். கடைசி விநாடிக் குழப்பமாக எதைச் செய்யலாம் என்று சிந்தித்துத் தவித்து முடிவில் ஒரு குழப்பத்துக்குத் திட்டமும் போட்டார்கள் அவர்கள்.

அங்கே பாண்டியனின் விடுதி அறையைக் காப்பதற்காக வராந்தாவிலும், அறை வாசலிலுமாகக் கம்பளிப் போர்வை, உல்லன் அங்கி, படுக்கை சகிதம் நூற்றுக்கணக்கான மாணவர்கள் இரவிலும் தங்குவது நீடிக்கவே, அதே வரிசையைச் சேர்ந்த மற்ற அறைகளிலுள்ள மாணவர்கள் வெளியே வரவும், உள்ளே போகவும், நடமாடவும் அது இடையூறாக இருப்பதாகவும், பாண்டியனின் ஆதரவு மாணவர்கள் மற்ற மாணவர்களை அடிப்பதாகவும், உதைப்பதாகவும், பயமுறுத்துவதாகவும் இரவு ஒன்பதரை மணிக்குமேல் ஹாஸ்டல் சீஃப் வார்டன் பேராசிரியர் பண்புச் செழியனிடம் போய்ப் பொய்யாக ஒரு புகார் செய்தார்கள் அன்பரசன் குழுவினர்.

பேராசிரியர் பண்புச் செழியன் அன்பரசன் குழுவினரிடம் அநுதாபம் உள்ளவர். என்றாலும் அந்த நள்ளிரவில் பெரும்பான்மை மாணவர்களின் அன்புக்கும் பிரியத்துக்கும் பாத்திரர்களாயிருக்கும் பாண்டியனிடமும், மோகன்தாஸிடமும் போய் மோதிக் கொள்வதற்குத் தயங்கினார் அவர்.

அன்பரசன் குழுவினரின் வற்புறுத்தலை மீற முடியாமல்தான் அவர்களோடு பாண்டியன் தங்கியிருந்த விடுதிக்குப் புறப்பட்டார். புறப்படுவதற்கு முன் மனத்தில் ஏதோ தோன்றியதால், அன்பரசனையும், வெற்றிச் செல்வனையும் பார்த்து, ''நீங்கள் இருவரும் என்னோடு அங்கே வரவேண்டாம் என்று நினைக்கிறேன். நானே போய் விசாரித்து அவர்களை எச்சரித்துவிட்டு வருகிறேன்'' என்றார். ஆனால் அவர்கள் கேட்கவில்லை. ''நாங்களும் வருகிறோம். எங்களுக்கு யாரிடமும், எதற்காகவும் பயம் கிடையாது'' என்றார்கள்.

''உங்களையும் என்னோடு சேர்த்துப் பார்த்தால் அவர்கள் ஆத்திரம் அதிகமாகும்'' என்றார் பண்புச் செழியன்.

''நம்மவரான நீங்களே இப்படி எங்களை ஒதுக்கினால் எப்படி ஐயா?'' என்று உரிமையை நினைவூட்டிக் குழைந்தார்கள் அவர்கள். வேறு வழியின்றி அவர்களோடு பாண்டியனின் விடுதிக்குப் போனார் பிரதம விடுதிக் காப்பாளர் பண்புச் செழியன். அங்கே விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. விடுதி வராந்தா கலகலப்பாயிருந்தது. சில மாணவர்கள் சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். குளிர் தாங்க முடியாமல் சிலர் புகை பிடித்துக் கொண்டிருந்தார்கள். கேரம்போர்டில் கவனமாக இருந்தனர் சிலர். அரட்டையடித்துச் சிரிப்பலைகளைக் கிளப்பிக் கொண்டிருந்தது ஒரு கூட்டம்.

திடீரென்று எதிர்பாராதவிதமாகப் பிரதம வார்டனையும், அவரோடு



அன்பரசன் குழுவினரையும் கண்டதும் பாண்டியனின் விடுதி முகப்பில் இருந்த எல்லா மாணவர்களும் வந்து அவர்களை எதிர்கொண்டனர். வார்டனின் வரவால் மெல்ல மெல்ல ஓரளவு அமைதி வந்திருந்தது அங்கே.

பண்புச் செழியனின் முதுகுக்குப் பின்னே மறைந்தாற்போல் நின்றார்கள் அன்பரசன் முதலியவர்கள்.

'டேய், அன்பைப் பார்த்தாயா, பண்பின் முதுகுக்குப் பின்னால் ஒளிகிறது' என்று ஒரு மாணவன் கேட்டதும், 'ஆமாண்டா ! பண்புக்குப் பின்னால் அன்பு ஒளியும், பண்பு மாண்புக்குப் பின்னால் போய் ஒளியும்.... வேறே வேலை இல்லையா உங்களுக்கு ?' என்று மற்றொரு மாணவன் இதற்குப் பதில் கூறியதும் மெல்லிய குரலில் இருந்தாலும் சீஃப் வார்டனின் காதில் விழுந்து விட்டது. இதைக் கேட்டு அவர் ஓரளவு ஆத்திரமடைந்து விட்டார் :

''ஒரே இடத்திலே கூடிக் கொண்டு நீங்கள் இப்படி மற்ற அறை மாணவர்களின் தூக்கத்துக்கு இடையூறு செய்வது நல்லதல்ல. உடனே அவரவர்கள் அறைக்குக் கலைந்து சென்றுவிட வேண்டும்'' என்று நிதானமாகத்தான் ஆரம்பித்தார் அவர். ஆனால் வாக்கிலே சனி என்பார்களே, அது வந்து சேர்ந்தது அவருடைய பேச்சின் இறுதிப் பகுதியில்.

''இந்த மாநிலத்திலேயே வேறெந்த விடுதியிலும் இல்லாத அளவு இங்கே முதல்தரமான சாப்



பாடாகச் சாப்பிடுகிறீர்கள்! உடம்பிலே கொழுப்பு ஏறினால் வாயும் கொழுத்துப் போகிறது... இல்லையா?'' என்று சீறி விட்டார். அதன் விளைவு உடனே பெரும் எதிர்ப்பைச் சம்பாதிக்க நேரிட்டது. 'சாப்பாட்டைச் சொல்லிக் காட்டி அவர் பேசிய அந்த வாக்கியத்தை வாபஸ் வாங்கினால் ஒழிய' அங்கிருந்து அவரைப் போக விடமுடியாது என்று மாணவர்கள் வளைத்துக் கொண்டு விட்டார்கள். பேராசிரியர் பண்புச் செழியன் திக்குமுக்காடிப் போனார். இரவு நேரம் வளர்ந்து கொண்டே யிருந்தது.

மாணவர்களின் மனத்தைப் புண்படுத்தும் வகையில் பேசி விட்டதனால் விடுதிகளின் தலைமைக் காப்பாளர் பண்புச் செழியன் அந்த நள்ளிரவில் வகையாகச் சிக்கிக் கொண்டு விட்டார். அவர் அன்பரசன், வெற்றிச் செல்வன் கோஷ்டியோடு வந்ததே அங்கிருந்த மாணவர்களுக்கு எரிச்சலூட்டி யிருந்தது. ஏதோ கோபத்தில் உணர்ச்சி வசப்பட்டு, 'நீங்கள் 'உண்ணுகிற உணவின் கொழுப்பல்லவா உங்களை இப்படிப் பேச வைக்கிறது?' என்று வேறு கேட்டவுடன் பண்புச் செழியன் மேல் உள்ள கோபம் இரண்டு மடங்காகி முற்றி யிருந்தது. மணவாளன் அப்போது அங்கில்லை. மாலையிலேயே மாணவர்கள் எல்லாரிடமும் சொல்லிக் கொண்டு ஹோட்டல் அறைக்குப் போய் விட்டார். பேராசிரியர் பண்புச் செழியன் தான் கூறிய வார்த்தைகளுக்காக வருந்தி மன்னிப்புக் கேட்கா விட்டால் மாணவர்கள் அவரை விடுவதற்குத் தயாராயில்லை. பாண்டியனும், மோகன்தாஸும் கூடப் 'போனால் போகிறது விட்டுவிடலாம்' என்று கருதியும் மற்ற மாணவர்கள் பிடிவாதமாக இருந்தனர். ஒரு நிலைமைக்கு மேல் பொறுமையிழந்து வார்டன் சீறினார்: ''இப்படிச் செய்வதற்காக நீங்கள் கடுமையான விளைவுகளை எதிர்கொள்ள வேண்டி யிருக்கும். உங்கள் விடுதிகளின் தலைமைக் காப்பாளரை நீங்கள் 'கேரோவ்' செய்கிறீர்கள். இந்த விஷயம் துணைவேந்தர் காதுவரை போகும்! நான் உங்களைச் சும்மா விடமாட்டேன்.''

''இந்த விஷயம் மட்டுமில்லை! ஏதோ வேலையில்லாத தண்டச் சோற்றுத் தடிராமன்களைப் பேசுவது போல் நீங்கள் எங்களைக் கேவலமாகப் பேசிய வாக்கியங்களும் சேர்த்தே துணைவேந்தர் காதுக்குப் போகும்'' என்று மாணவர்களும் கடச்சுட அவருக்குப் பதில் கூறினார்கள்.

நேரம் இரவு பன்னிரண்டு மணிவரை ஆகிவிட்டது. பலநூறு மாணவர்கள் சூழ்ந்து வளைத்துக் கொண்டு விட்டதனால் தலைமை விடுதிக் காப்பாளர் பண்புச் செழியனோ, அவரோடு வந்த அன்பரசன் வெற்றிச்செல்வன் முதலியவர்களோ இந்தப் பக்கம் அந்தப் பக்கம் அசையக் கூட முடியவில்லை. பன்னிரண்டே கால் மணிக்குப் பண்புச் செழியன் பணிந்து வழிக்கு வந்தார். ''மாணவர்களே! நான் கூறியதில் தவறாக ஏதாவது இருந்தால் அதற்காக வருந்துகிறேன். உங்கள் அன்பான மன்னிப்பையும் கோருகிறேன்'' என்று அவர் கூறியபின்பே மாணவர்கள் அவரோடு வந்தவர்களையும் அவரையும் அங்கிருந்து செல்ல அனுமதித்தனர்.

இரவு ஒரு மணிக்கு விடுதிகளில் அரவம் அடங்கி விட்டது. பாண்டியனுக்கும், மோகன்தாஸுக்கும் காவலாக அறைக்கு உள்ளேயும், வெளியேயும், வராந்தாவிலும் வரிசையாக மாணவர்கள் படுத்திருந்தனர். விடியற்காலை நாலு நாலரை மணிக்கு, பாண்டியன் முதலியவர்களுக்கு ஓரளவு வேண்டியவனும், அந்தப் பகுதி விடுதிகளுக்கு 'நைட் வாட்ச்மே'னுமாகிய காத்தபெருமாள் என்பவன் வந்து, பல்கலைக் கழக மேற்கு வாயிலருகே சந்தேகத்துக்குரிய ஆட்களோடு இரண்டு மூன்று தென் மணி லாரி சர்வீஸ் லாரிகள் நிறுத்தப் பட்டிருப்பதாக வராந்தாவில் படுத்திருந்த மாணவர்களில் சிலரை எழுப்பித் தகவல் சொன்னான். அடுத்த பதினைந்து நிமிஷங்களில் இந்தச் செய்தியை அறிவிக்க மாணவர்கள் எல்லோரும் அவசரம் அவசரமாக எழுப்பப்பட்டனர். அறைக்குள்ளிருந்த பாண்டியன், மோகன்தாஸ் ஆகியோரும்கூட எழுந்து விட்டனர். லாரிகளில் தென்பட்டவர்கள் சரளைக் கற்கள், சோடா பாட்டில்கள், பாலாக் கம்பு, வெட்டரிவாள்கள் கடப்பாரைகளோடு வந்திருக்கக் கூடும் என்று காவல்காரன் காத்தபெருமாள் குறிப்பாக எச்சரித்து விட்டுப் போயிருந்தான்.

விடிந்தால் மாணவர் பேரவைத் தேர்தல். ஏதாவது கலகம் நடத்தி நிலைமையை நெருக்கடியாக்கிக் காட்டினால் துணைவேந்தரை நிர்ப்பந்தப்படுத்தி மறுபடியும் தேர்தலைத் தள்ளிப் போட வைக்கலாம் என்பதற்காக இது ஒரு சூழ்ச்சியா யிருக்கலாம் என்று பாண்டியன் சந்தேகப்பட்டான். குளிரும் பனியும் தூக்கச் சோர்வுமாக இருந்தாலும் எப்பாடுபட்டாவது எதிரிகளின் சூழ்ச்சியைச் சிதற அடிப்பதென்று துணிந்தார்கள் அவர்கள். அந்த அகாலத்தி



# தலைவலியா?

# அனஸின்

## விரைவிலே குணம் பெற <u>மேலானது</u>.

## ஏனெனில் அது சக்தி வாய்ந்தது; நம்பகமானது.




***சக்தி வாய்ந்தது***—ஏனெனில், உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனஸின். ஆகையால்தான் அனஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

***நம்பகமானது***—ஏனெனில், டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல் பல மருந்துகளின் கலவையே அனஸின். அதை குழந்தைகளுக்கும் கொடுக்கலாம்—எல்லா மருந்துகளுக்கும் கேட்பது போல உங்கள் குழந்தைக்கான இதன் சரியான அளவையும் டாக்டரிடம் கேளுங்கள்.

ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள் மற்றும் நோவுகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனஸின் சக்திவாய்ந்த நிவாரணி

# அனஸின்

**இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி**



Regd User of TM: Geoffrey Manners & Co., Ltd.

பவுடரினால் துலக்கிய
பாத்திரத்தின் மீது பொடிக் கசடு
பின்தங்கியிருக்கிறதா?

# மாசில்லாத பளபளப்பை
# வீசிட வைப்பது
# விம்.




**கசடு இல்லை!**
**பிசுக்கு இல்லை!**
**கீறல் இல்லை!**

லும் தங்களோடு புறப்படுவதற்காக விழித்திருப்பவர்கள் நானூறு, ஐந்நூறு பேர் தேறமுடியும் என்று தெரிந்தது பாண்டியனுக்கு. இவ்வளவு பேர்களும் மொத்தமாக மேற்கு வாயிலை நோக்கிப் படை யெடுத்தால் லாரிக்காரர்கள் பயந்து அவற்றை ஓட்டிக் கொண்டு திரும்பி ஓடிவிடுவார்களோ என்று தோன்றவே, மாணவர் கூட்டம் தெற்கு வாயில் வழியே வெளியேறி இரண்டு மூன்று குழுக்களாகப் பிரிந்து போய் லாரிகளை வளைத்துக்கொள்வது என்று முடிவாயிற்று.

தாங்கள் வெற்றிபெற முடியாத தேர்தலை நடக்கவே விடக் கூடாது என்ற வெறியுடன் எதிர்த் தரப்பினர் கடைசி விநாடிவரை முனைந்து நிற்பது தெரிந்தது. பிரதம விடுதிக் காப்பாளர் பேராசிரியர் பண்புச் செழியனும் மற்றவர்களும் வந்து வம்புக்கிழுத்து அதனால் மாணவர்களிடம் சிக்கித் துன்பம் அடைந்துவிட்டுப் போனபின் அவர்கள் மூலம் ஊருக்குள் செய்தி பரவி அதன் விளைவாக இந்த லாரிகளும் இந்த அடியாட்களும் வந்திருக்கலாம் என்றும் ஊகிக்க முடிந்தது. எதற்கும் முறைப்படி போலீஸுக்குத் தகவல் தெரிவிக்கலாம் என்று பட்டமளிப்பு விழா மண்டபத்தை ஒட்டி இருந்த பொது டெலிபோன் 'பூத்' துக்குப் போய் ஃபோன் செய்தார்கள். போலீஸ் நிலையத்தில் யாரோ கான்ஸ்டபிள் ஃபோனை எடுத்துப் பேசினார். இன்ஸ்பெக்டருக்காவது வட்டாரப் பெரிய போலீஸ் அதிகாரிக்காவது ஃபோன் செய்யச் சொல்லி யோசனை கூறினார் அவர். இன்ஸ்பெக்டருடைய வீட்டு நம்பருக்கு முயன்று தொடர்பு கொண்டபோது அவர் 'இவர்கள் என்ன சொல்கிறார்கள்' என்பதையே சரியாகக் காதில் வாங்கிக் கொள்ளாமல், 'யூனிவர்ஸிடி விவகாரமானால் வி.சி. ஃபோன் செய்யாமல் நாங்கள் தலையிடமுடியாது' என்று வைத்துவிட்டார். துணைவேந்தருக்கு ஃபோன் செய்தபோது அவர் வீட்டில் ஃபோனை எடுக்கப்படவில்லை. நாலைந்து மாணவர்கள் ஸ்டாஃப் குவார்ட்டர்ஸுக்கு விரைந்து பேராசிரியர் பூதலிங்கத்தை எழுப்பி இந்த விவரங்களை எல்லாம் சொன்னார்கள். அவர் அநுதாபத்தோடு பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு பின்பு பதில் சொன்னார் :

''எதையாவது கலகம் செய்து பேரவைத் தேர்தலை நிறுத்தி விடுவது தான் அவர்கள் இட்டமாயிருக்கும். எப்படியாவது முயன்று தேர்தல்கள் நடந்து முடியும்படியாகச் சுமுகமான சூழ்நிலையை நீடிக்கச் செய்யுங்கள். அது முக்கியம்'' என்று அறிவுரை கூறியனுப்பினார் பூதலிங்கம்.

மாணவர்கள் ஏற்கெனவே முதலில் திட்டமிட்டபடி அந்த வெடவெடக்கும் குளிரில் தெற்கு வாசல் வழியாக வெளியேறி ஓரிடத்தில் தங்கிக் கொண்டு ஆளனுப்பி அண்ணாச்சியையும் மணவாளனையும் எழுப்பிக்கொண்டு வரச் செய்தனர். அவர்கள் எழுந்து வந்தபின் அவர்களையும் கலந்து பேசிய பின் அந்த லாரிகளை மடக்குவது என்ற முடிவுடன் புறப்பட்டனர். நூறு நூறு மாணவர்களாகப் பிரிந்து நான்கு பக்கமிருந்தும் வளைக்கவே மூன்று லாரிகளிலுமிருந்த அறுபதுக்கு மேற்பட்ட குண்டர்கள் மாணவர்களை நோக்கிச் சோடாபுட்டி வீச்சிலும் கல்லெறியிலும் இறங்கினர். சிறிது நேரத்தில் கல்லெறியையும் பொருட்படுத்தாமல் மாணவர்கள் லாரிகளை நெருங்கி வளைக்கவே, குண்டர்களில் பெரும்பாலோர் இறங்கி ஓடி விட்




டார்கள். மாணவர்கள் கூட்டம் வெள்ளமாகப் பெருகி நிற்கவே, குண்டர்களால் — அவர்களிடம் பயங்கரமான ஆயுதங்கள் இருந்தும்கூட — எதிர்த்து நின்று தாக்குப் பிடிக்க முடியவில்லை. இதற்குள் நன்றாக டிரைவிங் தெரிந்த மாணவர்கள் அந்த மூன்று லாரிகளையும் ஓட்டிக் கொண்டு போய்ப் பல்கலைக் கழக எல்லைக்குள் விடுதிகளுக்கு அருகே நிறுத்திக் கொண்டு விட்டார்கள். போலீஸுக்கோ, வி.சி.க்கோ காட்டுவதற்குப் போதுமான கத்திகளும், அரிவாள், சோடா பாட்டில்கள், கடப்பாரை, இரும்புக் குழாய்கள், பழைய சைக்கிள் செயின்கள் எல்லாம் அந்த லாரிகளில் இருந்தன.

இதற்குள் பொழுது நன்றாக விடிந்து விட்டது. வேறு பல விடுதிகளிலிருந்தும் மாணவர்கள் வந்து கூடிவிட்டார்கள். விடுதி மாணவர்கள் காப்பி – சிற்றுண்

### இங்கிலாந்தில் ஹிந்தி

இங்கிலாந்தில் லீஸ்டர் என்ற ஊரில், ஒரு தொழிற்சாலையில் பத்து ஆங்கிலேய அதிகாரிகள் ஹிந்தி கற்றுக்கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள். காரணம், அங்குள்ள தொழிலாளிகளில் 85 சதவிகிதத்தினர் இங்கிலாந்தில் குடியேறியுள்ள இந்தியர்கள்! ஆதாரம்: இன்டஸ்டிரியல் சொஸைட்டி

உதவி: நாடோடி

---

டிக்குச் சென்றபோதுகூடக் கலகக்காரர்களை ஏற்றி வந்த லாரிகளுக்குக் காவலாக மாற்று ஏற்பாடு செய்துவிட்டுத்தான் போனார்கள்.

ஏற்கனவே அறிவித்திருந்தபடி பேரவைத் தேர்தலுக்காக அன்று பல்கலைக் கழகம் விடுமுறை. காலை பத்து மணியிலிருந்து இரண்டு மணிவரை மாணவர்கள் அனைவரும் வாக்குப் பதிவு செய்தபின் நான்கு மணிக்குள் வாக்குகள் எண்ணப்பட்டு முடிவு தெரிவிக்கப்படும் என்று சுற்றறிக்கையில் கூறப்பட்டிருந்தது. பேராசிரியர் பூதலிங்கமும், அவருடைய பொருளாதாரப் பிரிவைச் சேர்ந்த விரிவுரையாளர்களும் பல்கலைக் கழக நூல் நிலையக் கூடத்தில் வாக்குப் பதிவுக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். நூல் நிலைய முகப்பு சுறுசுறுப்பாகத் தென்பட்டது. பத்து மணிக்கு வாக்குப் பதிவு தொடங்கியதும் முதல் ஒரு மணி நேரத்துக்கு விடுதியில் உள்ள மாணவிகள்—வெளியிலிருந்து வந்து படிக்கிற மாணவிகள் எல்லோருமாக வாக்குப் பதிவு செய்யலாம் என்று அறிவிக்கப்பட்டிருந்ததனால் ஒன்பதரை மணிக்கே நூல் நிலைய வாசலில் பெண்களின் 'க்யூ' நிற்கத் தொடங்கிவிட்டது. கண்ணுக்கினியாள் ஓடியாடி மாணவிகளை ஒன்று சேர்த்து நிறுத்திக் கொண்டிருந்தாள். அன்பரசன் வெற்றிச் செல்வன் தரப்பினருக்காகப் பாடுபட்டுக் கொண்டிருந்த பொற்செல்வி என்ற மாணவி தனக்கு அதிக ஆதரவில்லாத ஏமாற்றத்திலும், விரக்தியிலும் முறைகளை எல்லாம் பொருட்படுத்தாமல் க்யூவிலேயே வெளிப்படையாக அன்பரசனுக்காகப் பிரசாரத்தைத் தொடங்கினாள். கண்ணுக்கினியாள் அதை மறுத்தாள்:

''இதோ பாருங்கள் மிஸ் பொற்செல்வி! நீங்கள் செய்வது முறையில்லை. உங்களுக்கு வேண்டியவர்களை அழைத்து வாருங்கள். க்யூவில் நிறுத்துங்கள். அவர்கள் வோட்டுப் போடட்டும். அது தவறில்லை. ஆனால் இந்த இடத்தில் வந்தும் நீங்கள் இப்படி வெளிப்படையாகக் 'கான்வாஸ்' பண்ணுவதை நான் ஆட்சேபிக்கிறேன்.''

கண்ணுக்கினியாளின் ஆட்சேபனையைப் பொற்செல்வி பொருட்படுத்தவில்லை. பொற்செல்விக்குத் தேர்தல் பகைமைகளைவிடக் கண்ணுக்கினியாளின் அழகிலும் தோற்றத்திலும் மயங்கி மலரைச் சுற்றி வட்டமிடும் வண்டுகள் போல் பல மாணவிகள் அவளைச் சூழ நிற்பதிலும் அவளுக்குக் கட்டுப்படுவதிலும் பொறுத்துக் கொள்ள முடியாத காழ்ப்பு இருந்தது. ஆற்றாமையாலும் தாழ்வு மனப்பான்மையாலும் உள்ளேயே வெந்து கொண்டிருந்தாள் பொற்செல்வி. கண்ணுக்கினியாள் பற்றியும் பாண்டியன் பற்றியும் மட்டரகமான துண்டுப் பிரசுரம் வெளியிட்டது கூட இவள்தான் என்பது பின்னால் கண்ணுக்கினியாளுக்குத் தெரிய வந்திருந்தது.

''அதுக்கென்ன செய்யறது? எல்லாருமே உன்னைப் போல் மினுக்கி மயக்கிக் கவர முடியுமா? நாங்கள் சொல்றதை வாய் திறந்துதான் சொல்ல முடியும். எங்களுக்கு மினுக்கத் தெரியாது'' என்று பொற்செல்வி சீறியதும் க்யூவில் நின்ற கண்ணுக்கினியாளின் சிநேகிதிகள் ஆத்திரத்தில் அந்த மட்டரகப் பேச்சுக்காகப் பொற்செல்வியை அடிப்பதற்குக் கையை ஓங்கிக் கொண்டு பாய்ந்து விட்டார்கள். ஆனால் அப்போதும் கண்ணுக்கினியாள்தான் குறுக்கிட்டு அவர்களைத் தடுத்தாள்.

''ஏதோ ஆத்திரத்தில் கத்துகிறாள். போனால் போகட்டும். இப்போது இவளோடு தகராறு வேண்டாம்.''

அப்போது கண்ணுக்கினியாளின் வார்த்தைகளுக்கு மாணவிகள் கட்டுப்பட்டனர். பொற்செல்வி கோபத்தோடு முணுமுணுத்தபடி க்யூவில் பின்னால் போய் நின்று கொண்டாள். சரியாக ஒன்பது மணி இம்பத்தெட்டு நிமிஷங்களுக்குப் பேராசிரியர் பூதலிங்கமும், வேறு ஒரு விரிவுரையாளரும், வெளியே வந்து நிலைமையைப் பார்த்துவிட்டு உள்ளே சென்றார்கள். பத்து மணிக்கு வாக்குப் பதிவு தொடங்கியது. உள்ளே ஒரு சிறிதும் தாமதமின்றி எல்லாம் விரைந்து நடந்ததனால் க்யூ வேகமாக நகரத் தொடங்கியது. எதிர்பார்த்ததற்கு முன்னதாகப் பத்தே முக்கால் மணிக்கே மாணவிகள் அனைவரும் வாக்களித்து முடித்து விட்டார்கள். நீராடி உடை மாற்றிக் கொண்டு விடுதிக் கட்டடங்களின் நடுவே இருந்த பிள்ளையார் கோயிலுக்குப் போய்க் கும்பிட்டு விட்டுப் பாண்டியனும், மோகன்தாஸும் கூடச் சென்று க்யூவில் முன்னால் நின்று கொண்டார்கள். பின்னால் பெரிய க்யூ விநாடிக்கு விநாடி அதிகமாகிக் கொண்டிருந்தது. (தொடரும்)

# பூட்ஸ் வழங்கிடும் சாரனு-இருமல் வரும்போது <u>உண்மையிலேயே</u> இதமளித்துச் செயலாற்றும் நோஸ்கபீன்* அடங்கிய இருமல் லாஸன்ஜ் (மாத்திரை)

சாரனுவை மெல்லுங்கள்.
தூக்கமோ,
மலச்சிக்கலோ விளை
விக்காமல் இருமலிலிருந்து
நிவாரணம் பெறுங்கள்.

*நோஸ்கபீன்—உலக சுகாதார ஸ்தாபனத்தால் இருமல் சிகிச்சைக்கு சிபாரிசு செய்யப்பட்ட நோஸ்கபீன் அதிக சக்தி வாய்ந்த பாதுகாப்பான இருமல் நிவாரணி. அது இருமல் ஏற்படும் கேந்திர ஸ்தானத்திலேயே நேரடியாகச் செயலாற்றுகிறது.

இருமல் நிவாரணி

Boots

சாரனு

இருமலுக்கு நம்பகமான
சிகிச்சையளிக்கும் லாஸன்ஜ் (மாத்திரை)

LOZENGES

ANTI-COUGH

CHBC-43-203-Tam

# பச்சை நிற கோலினஸ் குளோரோபில் வாய் துர்-நாற்றத்தை வெல்லுகிறது.

**பச்சை நிற கோலினஸ் குளோரோபில் பற்பசையில் குளோரோபில் அடங்கியுள்ளது. பசும் இலைகளிலிருந்து ஆக்கம் பெறும் குளோரோபில் இயற்கையாகவே துர்நாற்றம் போக்கும் தன்மையுடையது.**

பச்சை நிற கோலினஸ் பற்பசையால் பல் துலக்கி, அருவருப்பான வாய்நாற்றம் போக்குங்கள். அதன் புதுமையான 'மின்டி' சுவையையும் வளமான நுரையையும் நீங்கள் ரசிப்பீர்கள். இரவிலும் காலையிலும் பச்சைநிற கோலினஸ் குளோரோபில் பற்பசையால் பல் துலக்குங்கள்.



## இந்த 'நட்பு மிக்க மூச்சு' சோதனையை நீங்களே செய்து பாருங்கள்.

உங்கள் வாய்க்கு அருகில் உள்ளங்கையைப் பிடியுங்கள். அதன் மீது நீண்ட மூச்சு விடுங்கள். விரைவாக மூச்சை உள்ளுக்கு இழுங்கள். பிறகு பச்சை நிற கோலினஸ் குளோரோபில் பற்பசையால் பல் துலக்குங்கள். சோதனையை மீண்டும் செய்து பாருங்கள். இப்போது உங்கள் மூச்சு தூய்மையுடன் இனிமையாக விளங்குவதைக் காண்பீர்கள்.




KC-6

**பச்சை நிற கோலினஸ் குளோரோபில்**

Regd User of TM: Geoffrey Manners & Co., Ltd.




ரகுபதி கடைசி ஆரஞ்சுச் சுளையைப் பிரமீளாவின் வாய்க்குள் திணிப்பதற்கும் ரயில் நாக்பூரில் வந்து நிற்பதற்கும் சரியா யிருந்தது.

''அதற்குள்ளாகவா நாக்பூர் வந்துவிட் டது? பொழுது போனதே தெரியவில்லை'' என்றான் அவன்.

''எனக்குக்கூடத்தான். இதற்கு முன் சென்னையிலிருந்து டில்லிக்கு எவ்வளவோ தடவை இதே 'கிராண்ட் டிரங்க்' எக்ஸ் பிரஸில் பிரயாணம் செய்திருக்கிறேன். பொழுது நகரவே நகராது. ஒரே வெறுப்பாக இருக்கும். 'கூபே'யில் கூடப் பிரயாணம் செய்யும் நபரின் முகத்தைப் பார்த்தால் எரிச்சலாக இருக்கும். ஆனால் இந்தத் தடவை எவ்வளவு குளிர்ச்சி... இனிமை...''

''போதும், போதும்! அடுத்த வருஷம் மீண்டும் என்னுடன் 'கூபே'யில் பிரயாணம் செய்தால் வெறுப்பெல்லாம் மீண்டும் விசுவ ரூபமெடுக்கும். கல்யாணமாகிச் சில தினங் களுக்கு எல்லா அனுபவங்களுமே இனிக்காதா என்ன?''

''தினங்களா? நமக்குக் கல்யாணமாகி முழுசாக எவ்வளவு மணிகளாயிருக்கும்?''

''நாற்பத்தெட்டு மணி, இருபது நிமி டங்கள், எட்டு வினாடிகள்.''

''கணக்கு வாத்தியார் பெண் என்பது சொல்லாமலே தெரிகிறது.''

நாக்பூர் பிளாட்பாரத்தின் பேய் இரைச்சல் புதுத் தம்பதிகள் காதில் விழவேயில்லை. இன்ப லோகத்தில் சிறகடித்துப் பறந்து கொண்டிருந்த அவர்கள் பக்கத்தில் அந்தக் கிழவர் வந்து நின்றார்.

வயது எழுபதுக்கு மேலிருக்கும். என்றாலும் கம்பீரமான தோற்றம். காக்கிச் சட்டை (யாரோ ராணுவ அதிகாரி தந்த பழசு போலும்!) கழுத்தைச் சுற்றி ஒரு மப்ளர். பழுப்பு வர்ண வேஷ்டி கிழிந்து தொங்கியது. 'கான்வாஸ்' பூட்ஸ். கையிலே கிழிந்துபோன கீதையின் பிரதி.

யாசகத்துக்கு வந்திருக்கிறார் என்பதைத் தெரிந்து கொண்ட ரகுபதி, ''அந்தப் பக்கம் எங்காச்சும் போ ஐயா... இங்கே வந்து ஏன் கழுத்தறுக்கிறே? இது பஸ்ட் கிளாஸ் வண்டி'' என்று அவரை விரட்டினான். புது மனைவியுடன் இன்பக் கனவுகள் கண்டு கொண்டிருந்தவனுக்குக் கிழவரின் வரவு பெரிய இடையூறாக இருந்தது. கிழவர் நகரவில்லை. ஒரு புன்னகை அவரது முகத்தைப் பொலிவுறச் செய்தது. அதில் அசாதாரணமான ஒரு கவர்ச்சி இருந்தது. சரளமான ஆங்கிலத்தில் பேசத் தொடங்கினார் அவர். இலக்கண சுத்தமாக அவர் பேசினதை இன்றைக்கெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கலாம் போலிருந்தது பிரமீளாவுக்கு. ஊடே வடமொழி இலக்கியத்திலிருந்து மேற்கோள்களாக அள்ளி விட்டார் அவர். கஷ்ட தசையிலும் அவருடைய நகைச்சுவை உணர்ச்சி அவரைக் கைவிடவில்லை. இது பிரமீளாவுக்கு ஏற்படுத்தின பிரமிப்பு கொஞ்ச நஞ்சமல்ல. கிழவர் தம் கதையைச் சொல்லத் தொடங்கினார்.

அவர் தலைமை ஆசிரியராக இருந்து ரிடையரானவர். வறுமையின் கொடுமை காரணமாக வேலையை விட்ட பின்வரும் கூடப் பல இடங்களில் அவர் வயிறு வளர்ப்பதற்காக உழைக்க வேண்டி வந்தது. எத்தனை விதமான உத்தியோகங்கள்! அச்சாபீஸில் ப்ரூப் ரீடர், பெரிய இடத்துக் குழந்தைக்கு டியூஷன், மளிகைக் கடையில் கணக்கெழுதல், புரோகிதத்துக்கு உதவி, தனியார் நிறுவனத்தில் குமாஸ்தா – இத்தியாதி.

''இன்றும் நான் வளர்த்த ஜி. எஸ். பி. ஹைஸ்கூல் தஞ்சாவூர் ஜில்லாவில் தனியானதொரு கீர்த்தியுடன் விளங்குகிறது. பத்து மாணவர்களுடன் ஒரு காலத்தில் கீற்றுக் கொட்டகையில் நான் தொடங்கிய ஸ்கூல் என்றால் இன்று யாராவது நம்புவார்களா?'' தலைமை ஆசிரியரின் கண்கள் இரண்டு ஜோதிப் பிழம்புகளாக மாறின. அவற்றின் தீட்சண்யம் ரகுபதியை ஊமையாக மாற்றியிருந்தது. சிலையாக வீற்றிருந்த அவனை மீண்டும் இந்த உலகத்துக்கு இழுத்து வந்தது பிரமீளாவின் குரல்.

''ஜி. எஸ். பி. ஸ்கூல் தலைமை ஆசிரியரா? என்னைத் தெரியவில்லையா ஸார்? நான் உங்கள் பழைய மாணவி பிரமீளா ஸார். பத்துப் பன்னிரண்டு வருடங்களுக்குள் என்னமா மாறிவிட்டீர்கள்? உட்காருங்கள் ஸார்.''

''என் மாணவியா? கண் பார்வை சரியில்லை அம்மா. இருந்தும் கண்ணாடி இல்லாமலே காலம் தள்ளுகிறேன். நினைவு வேறு தவறுகிறது. வயதாகிவிட்டதல்லவா? நீ எப்போது அம்மா படித்தாய்? கெ. சவிதாவை நினைவிருக்கு. மாலதி பம்பாயில் இருக்கிறாளாம்... ஆர். தமயந்தியின் 'கிளாஸ்மேட்'டா நீ?''

''நான் அவளுக்கு ரொம்ப ஸீனியர் ஸார். என்னை எப்படி அதற்குள் மறந்து விட்டீர்கள்? நான் வகுப்பிலேயே முதல் பெண்ணாக இருந்தேனே?''

தலைமை ஆசிரியர் குப்புசாமி ஐயர் யோசிக்கத் தொடங்கினார். ஒரு நாளா, ரெண்டு நாளா? முழுசாக முப்பது வருடங்களை அல்லவா அவர் ஆசிரியர் தொழிலில் செலவிட்டிருந்தார்?

''பிரமீளாவா? எஸ். பிரமீளாவா?..... பத்மா... பார்வதி... பங்கஜம்...'' என்று ஏதோ முணுமுணுத்துக் கொண்டார்.

ரகுபதிக்கு எல்லாம் வேடிக்கையாக இருந்தது. கொஞ்சம் வெறுப்பாகக் கூட இருந்தது. அந்தத் தலைமை ஆசிரியரின் துயரக்கதை அவன் மனத்தில் எந்த விதமான கொந்தளிப்பையும் ஏற்படுத்தவில்லை. ரிடையரான பிறகு எவ்வளவோ பேர் சிரமப்படத்தான் செய்கிறார்கள். அதற்கென்ன செய்வது? சென்ற மாதம் ரகுபதிக்குப் பாடம் போதித்த 'தமிழ் ஐயா' கையில் மருந்துப் பாட்டிலுடன் நொண்டிக் கொண்டுபோனதை அவன் காணத்தான் செய்தான். ஆனால் பிரமீளாவைப் போல் உணர்ச்சி வசப்பட்டு விடவில்லை. அவரவர் பிரச்னை அவரவருக்கு என்று எண்ணிக் கொண்டு மேலே சென்றான்....

**வ**ண்டி இன்னும் ஐந்து நிமிஷங்களில் கிளம்பும் என்பதை அறிவிக்கப் பிளாட்பாரம் மணி தொடர்ந்து ஒலித்தது.

''உங்க மூத்த பெண் இப்போது எங்கே இருக்கிறாள்?'' என்று கொஞ்சம் தடுமாற்றத்துடன் வினவினாள் பிரமீளா.

''யார் லக்ஷ்மியா? அவள் ராஞ்சியிலே இருக்கிறாள். ராஜி போன வருஷம் போய் விட்டாள்... ருக்கு... அந்தக் கதையைக் கேட்காதே... என் கஷ்டம் என்னோடு இருக்கட்டும்.''

''ராஜி போய்விட்டாளா? அவள்தான் என் நெருங்கிய தோழி.... பிள்ளைகள்?''

''ஒன்றும் சுகமில்லை. மூத்தவன் ஒரு 'ஒர்க் ஷாப்'பில் மெக்கானிக்காகப் பணியாற்றுகிறான். எட்டுக் குழந்தைகள். பஞ்சுதான் ஊமையாச்சே. ஊரைச் சுற்றிக் கொண்டிருக்கிறான்.... உம், வண்டி கிளம்பப் போகிறது. உன்னைப் பார்த்ததிலே ரொம்பச் சந்தோஷம். என்னை நினைவு வைத்துக்கொண்டிருக்கிறாயே... அதுவே எனக்கு மன நிறைவு! நான் போய்வருகிறேன் பிரமீளா!'' என்று கிளம்பினார் குப்புசாமி ஐயர்.

''இதை என் ஞாபகார்த்தமாக வைத்துக் கொள்ளுங்கள்'' என்று ஒரு நூறு ரூபாய் நோட்டை அவரிடம் தந்தாள் பிரமீளா.

''வேண்டாம், அம்மா. உன்னைப் பார்த்ததே போதும்'' என்று கிளம்பினார் ஆசிரியர்.

பலவந்தமாக அவர் கிழிசல் கோட்டின் பையில் நோட்டைத் திணித்தாள் பிரமீளா.

**இனி ஜி. எஸ். பாலகிருஷ்ணன் தம் மனைவி விஜயா எழுதிய அரைகுறைக் கதையை முடித்து வைக்கிறார்:**

வண்டி நகர்ந்ததும் பிரமீளாவுக்கு அருகில் நெருங்கி அமர்ந்தான் ரகுபதி.

''சும்மா இருக்க மாட்டீர்களா?''

''சும்மா இருப்பதற்கா 'கூபே'யில் ரிஸர்வ் செய்தோம்? ஆமாம், அந்த ஹெட்மாஸ்டரிடம் நீ எப்பொழுது படித்தாய்?''

''நான் அவரிடம் படிக்கவே இல்லையே! இப்பொழுதுதான் அவரைச் சந்திக்கிறேன்.''

''நிஜமாகவா?''

''பின்னே, பொய்யா சொல்லுகிறேன்? நான் தஞ்சாவூர் பார்த்ததே கிடையாது. படித்தது வடக்கே லக்னௌவில். இவரிடம் நான் எப்படிப் பாடம் கேட்டிருக்க முடியும்?''

''அவரிடம் அவருடைய பழைய மாணவி என்று ஏன் சொன்னாய்?''

''அவர் சந்தோஷமாயிருக்கட்டும் என்றுதான். தம் மாணவிகளில் ஒருத்தி தம்மை நினைவு வைத்துக் கொண்டிருக்கிறாள் என்று தெரிந்தால் ஓர் ஆசிரியர் எவ்வளவு மகிழ்ச்சி அடைவார் தெரியுமா? பணம் காசுக்கு ஆசைப்படாமல் இருளிலிருந்து ஒளிக்கு இழுத்துச் செல்லும் பணியை இலட்சியமாகக் கொண்டு, வாழ்வை அதற்கு அர்ப்பணம் செய்யும் உபாத்தியாயர்களுக்கு ஏதாவது ஓர் ஆத்ம திருப்தி இருக்க வேண்டாமா?''

''அதற்காக நூறு ரூபாயை விட்டெறிவார்களா? எத்தனையோ ஆசிரியர்கள் வறுமையில் வாடுகிறார்கள். அவர்களுக்கெல்லாம் நாம் பணம் தர முடியுமா?''

''இது என்ன பேச்சு? நான் தந்த நூறு ரூபாய் வெறும் அற்பக் காசு. நம் கல்யாணத்துக்கு என் தோழிகள் பரிசளித்த பணம் இருந்ததால் தந்தேன். தனிப்பட்ட ஆசிரியர் ஒருவருக்கு உதவி செய்வதன் மூலம் ஆசிரிய சமூகத்துக்கே அஞ்சலி செலுத்தின திருப்தி ஏற்பட்டது எனக்கு. ஆசிரியத் தொழிலை விடச் சிறந்த தொழில் உண்டா?''

''ஏது! யாரோ ஒருவர் பிச்சைக்கு வரப் போய் பெரிய மேடைப் பிரசங்கம் செய்கிறாய்?...''

அவன் முடிக்கவில்லை. அவள் உடனே இடைமறித்தாள்.

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்... என் மனம் புண்படும்... என் தகப்பனார் ஒரு கணிதப் பேராசிரியர் என்பதை மறந்து விட்டீர்களா?'' என்று கேட்கையில் அவள் கண்களில் நீர் திவலையிட்டது.

---

## அமரர் "கல்கி" வாழ்க்கை வரலாறு



அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாற்றை வெளியிடுவதற்கான விரிவானதொரு திட்டத்தைக் கல்கி நிறுவனம் வகுத்துள்ளது.

கல்கியின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், அனுபவங்கள், அவருடைய இலக்கியப் படைப்புக்கள், வெவ்வேறு துறைகளில் அவர் நடத்திய இயக்கங்கள், புரிந்த சாதனைகள் — இவைபற்றியெல்லாம் தகவல் திரட்டி ஆராய்ச்சிநடத்தி இந்த வரலாற்றை எழுதிக் கொடுக்கும் பொறுப்பை ஸ்ரீ சுந்தாவிடம் ஒப்படைத்திருக்கிறோம்.

இந்தப் பணிக்கு கல்கியின் எண்ணிலா நண்பர்கள், அன்பர்களின் ஒத்துழைப்பும் இன்றியமையாதது.

துணைக் கல்கி என்ற சஞ்சிகையை இந்த ஸ்தாபனம் நடத்தியது பல அன்பர்களுக்கு நினைவிருக்கலாம். அப்பத்திரிகையின் இதழ்கள் யாரிடமாவது இருந்தால், அனுப்பி வைக்கக் கோருகிறோம்.

ஆனந்தவிகடனில் அமரர் கல்கி அவர்கள் எழுதிய கதை, கட்டுரைகளின் தொகுப்புக்கள் இருக்குமாயின் அனுப்பி வைத்து உதவக் கோருகிறோம்.

கல்கியுடன் நெருங்கிப் பழகியவர்களும், வெவ்வேறு சமயங்களில் அவருடன் தொடர்பு கொண்டிருந்தவர்களும், அவரைப் பற்றித் தமக்கு நேர்முகமாகத் தெரிந்த சுவையான தகவல்களையும், தம்மிடம் சொன்ன கருத்துக்களையும் எழுதி அனுப்ப வேண்டுகிறோம்.

கல்கியிடமிருந்து கடிதங்கள் வரப்பெற்றவர்கள், அவற்றில் சுவையான செய்திகளோ, கருத்துக்களோ அடங்கியவற்றைத் தேர்ந்தெடுத்து அனுப்பக் கோருகிறோம். இவ்வாறு அனுப்பும் கடிதங்கள் மூல வடிவத்தில் இருக்க வேண்டும். கல்கி சம்பந்தப்பட்ட ஃபோட்டோக்களையும் அனுப்பி வைக்கலாம். கடிதங்களும் படங்களும் பிறவும் பயன்படுத்திய பிறகு, உரியவருக்குத் திருப்பி அனுப்பப்படும். எல்லாவற்றையும் கல்கி வரலாற்றுத் தொகுப்பாளருக்கே நேராக அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

முகவரி: திரு எம். ஆர். எம். சுந்தரம் (''சுந்தா'') 14 (தோட்ட வீடு), பிஞ்சாலா சுப்பிரமணியம் தெரு, சென்னை—17.

பசியைப் பெருக்குவதோடு நின்றுவிடும் எந்த டானிக்கும்
பாதி வேலையைத்தான் செய்யும்

இன்க்ரிமின் பெறுவீர்.. உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றும்








சேருவீர் இன்க்ரிமின் இனத்தோடு...
வளர்ச்சிக்கான பசியைப் பெறுவீர் உடனே!

பசியைப் பெருக்குவதோடு மட்டுமின்றி, உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றுகிறது இன்க்ரிமின் டானிக். காரணம், உங்கள் குழந்தை சாப்பிடும் புரத சத்துக்களை மேம்படப் பயன்படுத்திக்கொள்ளும் அதிமுக்கியமான அமினோ அமிலம் அதில் அடங்கியுள்ளது.

Lederle எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன.

# இன்க்ரிமின்* டானிக்

பெரிய குழந்தைகளுக்கு இரும்புச் சத்து அடங்கிய இன்க்ரிமின் சிரப் — 175 மிலி & 57 மிலி.
இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ்-10 மிலி

* அமெரிக்கன் ஸயானமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

லின்டாஸ்-INC. 20.690 TM

# ராஜாஜியின் ஜெயில் டைரி





பத்தேகான் மூன்று கட்டு மெழுகு வத்திகளைக்கொண்டு வந்திருந்தார். எனக்கு ஒரு கட்டு கொடுத்தார். அது உபயோகப்படக் கூடும்.

இன்று டிஸம்பர் 24ம் தேதி. என்னுடைய கழுத்தில் மாட்டிக் கொள்வதற்காக என்னுடைய பதக்கத்தை ஒரு கயிற்றில் கட்டிக் கொண்டு வந்தார்கள். அந்தப் பலகைத் துண்டில், ''8393. 21–12–21 — 20–3–22'' என்று எழுதியிருந்தது. முதலில் உள்ளது நான் சிறைக்கு வந்த தேதி. அடுத்தது நான் விடுதலை பெறும் தேதி.





என்னுடைய ''சரித்திர அட்டை''யில் கீழ்கண்ட விவரங்களும் காணப்பட்டன :

''அரசியல் கைதி. வந்த தேதி 21–12–21. அப்பீல் செய்ய மறுத்துவிட்ட தேதி 24–12–21. பெயர்: ஸி. ராஜகோபாலச்சாரியார். பிராமணர். இந்திய தேசிய காங்கிரஸின் பொதுக் காரியதரிசி. கல்வி நிலை: ஸி.''

''ஸி'' என்பதன் பொருள் எழுத்து வாசனை இல்லை என்பதாகும். எவ்வளவு அலட்சியமாக எழுதுகின்றூர்கள் !

அதன்பின் கீழ்க்கண்ட விவரங்கள் : ''தண்டனை: மூன்று மாதம் வெறுங் காவல்.''

தண்டனைத் தேதி: 21–12–21.
விடுதலைத் தேதி: 20–3–22.
வயது: 42.
உயரம்: 5 அடி 4 அங்குலம்.
நிறை: 104 ராத்தல்.''

ரங்கம் செட்டி தாம் சிறைக்கு வருவதற்கு இரண்டு நாட்களுக்குமுன் தம்மை நிறுத்துப் பார்த்தபோது தம்முடைய நிறை 142 ராத்தல் இருந்ததாகக் கூறுகிறூர். ஆனால் அவருடைய 'சரித்திரம்' 137 ராத்தல் என்றே கூறுகிறது. பத்தேகான் முகம்மது கௌஸ் தம்மை நிறுத்தவர் 125 ராத்தல் என்று கூறியதாகவும் ஆனால் சரித்திரத்தில் 120 ராத்தல் என்று காண்பதாகவும் கூறுகிறூர். இப்படி ஒவ்வொருவருடைய நிறையையும் ஐந்து ராத்தல் குறைத்து எழுதக் காரணம் என்ன? சிறை வாழ்வில் நிறை குறையும் என்று எதிர்பார்த்து முன்கூட்டியே குறைத்து எழுதுகிறூர்களோ என்னவோ?

காலையில் 10-30 மணிக்கு, நாங்கள் ஆந்திர ஒத்துழையாமைக்காரர்களைக் கிணற்றடியில் பார்த்தோம். ஆனால் அவர்களைச் சந்திக்க எங்களுக்கு இன்னும் அனுமதி கிடைக்கவில்லை. நான் என் பகுதியிலிருந்த வண்ணம் வணக்கம் செய்தேன். அவர்களும் நாங்கள் இருந்த இடத்திலிருந்து கொண்டே எனக்கு நமஸ்காரம் செய்தார்கள். நாங்கள் சந்திக்கக் கூடாது என்பதற்காக அவர்களைக் கிணற்றுக்குக் கூட்டிப் போகும் நேரத்தில் எங்களைக் கூட்டிச் செல்வதில்லை.



> ''நாடாளுமன்றத்தின் ஒப்புதல் இல்லாம லேயே சிம்லா ஒப்பந்தத்தை ஊர்ஜிதப் படுத்தியதன் மூலம் நாடாளுமன்றத்துக்குக் கொடுக்கக்கூடிய மிக உயர்ந்த மரியாதையைக் காட்டியிருக்கிறோம்!'' - சுவரண்சிங்
> இது எப்படி என்பது சுவரண்சிங்குக்குத் தான் புரியும்!
> ஆதாரம் 'தீம்மத்' - சம்பத் குமாரி

இன்று நடுப் பகலில் சிறைத் தலைமை அதிகாரியும், இராணுவ உடை தரித்த மற்றொரு ஐரோப்பியரும், சிறையின் துணை அதிகாரியும், சிறையைச் சுற்றிப் பார்க்க வந்தார்கள். எங்கள் அங்க அடையாளங்களைச் 'சரி' பார்த்தார்கள். என்னுடைய மாலை உணவு என்னுடைய ஆஸ்துமா வியாதிக்கு ஒத்துக் கொள்ளவில்லை என்று நான் தலைமை அதிகாரியிடம் கூறினேன். அவர் என்னை வைத்தியசாலைக்கு அனுப்புவதாகச் சொன்னார். வைத்திய சாலை இதைவிடக் கேவலமாக இராது என்று எண்ணுகிறேன்.

இன்று பிற்பகல் கிணற்றடியில் நான் பல 'மாப்பிள்ளைமார்' ஜலம் எடுக்கக் கண்டேன். நான் அன்பாகப் பேசியதைக் கண்டு அவர்களுடைய முகங்கள் மலர்ச்சி அடைந்தன. அவர்கள் எல்லோரும் மாலாபுரத்தைச் சேர்ந்தவர்கள். நான் என்னுடைய அறைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தபொழுது ஒருவரைக் கண்டேன். அவர் இராணுவ முறையில் வணக்கம் செய்தார். அவரிடம் பேசியபொழுது அவரும் மாப்பிள்ளை ஜாதியினரே என்று அறிந்தேன். அவர் போர் எப்படி நடக்கிறது என்று விசாரித்தார். பலாத்காரத்தில் இறங்கியது தவறு என்பதை ஏற்றுக் கொண்டார். ''சாதுக்களையே (அதாவது நிரபராதிகளையே) கைது செய்திருக்கிறார்கள். நம்மையெல்லாம் கைது செய்தபின்னர், போர் செய்பவர்களைக் கைது செய்வது எளிது என்று எண்ணுவதுபோல் தெரிகிறது. நாம் இங்கே ஐந்து வருஷ காலம் இருக்க வேண்டுமா? அல்லது அதற்குள் சுயராஜ்யம் வந்துவிடுமா? தங்களைப் போன்ற பெரியவர்களும் பணக்காரர்களும் சிறைக்கு வருவதைக் காண எங்களுக்குச் சந்தோஷமாயும், உற்சாகமாயும் இருக்கிறது. எங்களுடைய மனத்தில் உண்டாகும் எண்ணங்களை எப்படி நாங்கள் கூற முடியும்?'' என்று, இவ்வாறாகப் பல கேள்விகள் கேட்டார். அந்த வீரருடைய கண்களில் நீர் பெருகியது.

நான் அவருடைய கேள்விகளுக்கெல்லாம் தகுந்த பதில் சொல்லித் தைரியமூட்டினேன்.

''இந்தத் தேசம் முழுவதும் ஒரே சிறைதானே?'' என்று சொன்னேன். ''நாம் இந்தச் சிறிய சிறையில் இருக்கிறோம், நம்மை வெள்ளைக்காரர்கள் புலிகளைக் கூண்டுகளில் அடைத்து வைப்பதுபோல் அடைத்து வைத்திருக்கிறார்கள். வெளியே உள்ள ஜனங்களைப் பெரிய சிறையில் வைத்திருக்கிறார்கள்'' என்றேன்.

''நாம் புலிகள்தான்'' என்றார் அவர். கைதி வார்டர் ஒருவர் வந்து அவரை அவசரமாக வேலைக்கு அழைத்துச் செல்லும் வரை நாங்கள் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தோம். அவர் தமக்குக் கோதுமையை மாவாகத் திரிக்கும் வேலை கொடுத்திருப்பதாகச் சொன்னார்.

சித்திரையில் 17ம் தேதியன்று ஹர்த்தால் நடத்துமாறு துண்டுப் பிரசுரங்கள் ஒட்டிய குற்றத்துக்காகத் தண்டிக்கப்பட்ட ஒரு முஸ்லிம் தையற்காரர் இன்று மாலை சிறைக்கு வந்து சேர்ந்தார். அவர் ஜாமீன் கொடுக்க மறுத்தபடியால் ஆறு மாதக் கடுங்காவல் தண்டனை அடைந்திருந்தார்.

என்னால் துணி துவைக்கும் வேலையைச் செய்ய முடியவில்லை. ஒரு வேளை இன்று பிற்பகல் வெயிலில் நின்று துவைத்ததுதான் காரணமோ, என்னவோ தெரியவில்லை, நேற்று - முன்தினத்தை விட அதிகமாக உடல் சோர்ந்து போய் விடாவிட்டாலும் மூச்சு வாங்கியது; தலை சுற்றியது. 'மாப்பிள்ளைமார்'களில் ஒருவருடன் உட்கார்ந்து பேசி என்னை நானே உற்சாகப் படுத்திக் கொண்டேன்.

இன்று மாலையில் அறையைப் பூட்டிய பிறகு என்னையறியாமலே ஒருவித மனச் சோர்வும் குழந்தைகளைப் பற்றிய நினைவும் என்னுடைய மனத்தில் வந்து தோன்றின. முதலில் அகற்ற முடியாதென்றே தோன்றியது. கவலையை அகற்றுவதற்காக அரும்பாடு பட்டுக் கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் எனக்குக் கீழ்க்கண்ட எண்ணங்கள் தோன்றி உதவி செய்தன:

''வேலையின் நிமித்தம் அநேகர் மாதக்கணக்காக மட்டுமின்றி வருஷக் கணக்காகக்கூடத் தங்கள் குடும்பத்தை விட்டுப் பிரிந்திருக்கவில்லையா? அவர்கள் எல்லோரும் சந்தோஷமாயிராமல் துக்கப்படவா செய்கிறார்கள்? நீயும் கூட இதற்குமுன் குழந்தைகளை விட்டுப் பிரிந்து இருந்ததில்லையா? ஏதோ, இப்போது சிறையில் இருப்பதாக எண்ணியே இப்படி மனச் சோர்வுக்கு இடங் கொடுத்து விட்டாய்.''

மேற்கண்ட கேள்விகளை நானே கேட்டுக் கொண்டேன். அதிலிருந்து மனச் சோர்வு நீங்கப் பெற்றேன்.

# அன்னத்தின் மென்னழகு மின்னிடும் உங்கள் முகத்தில்...

SKY LARK

மென்துகிலாய் மொலியும் போலிமி புடவைகள், ஜார்ஜெட்டுகள், நைலான்கள் சாதாரண மற்றும் பிரிண்டுகள் - போலிமி புடவைகள் - பெண்மைக்கனிகளுக்கும் சீர் வரிசைகள், மதிமயக்கும் உடுப்புத் துணிகள் - ஆண்களுக்கும் பெண்களுக்கும் போலிமியின் கைவரிசை.



**தி பாம்பே ஸில்க் மில்ஸ் லிட்.,**

இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், லால்பாக், பம்பாய்–12.

மெஸர்ஸ் G. I. மிர்புரி, 137, பீமசேன கார்டன் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 4
மெஸர்ஸ் ரமணிலால் D. ஷா, மெஜஸ்டிக் பிரஹ்லாத ராவ் பில்டிங், இரண்டாவது மாடி
11-25, 15, கொத்தபேட், விஜயவாடா - 1

மெஸர்ஸ் KN. பரமசிவன், 108, தெற்கு ஆவணி மூல வீதி, மதுரை - 1
மெஸர்ஸ் யுனிவர்ஸல் டிரேடிங் கார்ப்பொரேஷன், தேவஸ்தா மார்க்கெட், சிக்பேட், பெங்களூர்-2A
சர்வோதயா கார்ப்பொரேஷன், 12, கைலாஸ் மார்க்கெட், செகந்திராபாத் - 3

# ஸைக்கோ ஸாரநாதன்

## 33. கதை முடிந்தது!

அமிர்தலிங்கத்துக்கும் பத்மநாபன் குடும்பத்துக்கும் நடந்த கதையை விவரித்துக் கொண்டிருந்த நடராஜன் கூறினார்:

''பிரமீளாவின் வாக்குமூலத்தை ஸ்டெனோ ஒருவர் ஷார்ட் ஹாண்ட் நோட்டில் அப்படியே பதிவு செய்துக்கிட்டார். அதில் மட்டுமின்றி அதையே டைப் செய்தும் பிரமீளாவின் கையெழுத்தை வாங்கிக்கிட்டாங்க, ஐ. ஜி. ஆஃப் போலீஸ் காரியாலயத்திலே.

''இன்று காலைதான் ஐ. ஜி. எனக்கு ஃபோன் செய்தார். 'கேஸ் முடிஞ்சு போச்சு, இனிமே இது பற்றிக் கவலைப்படாதே'ன்னு சொன்னவர், — கன்கிராஜுலேட் பண்ணிட்டு, 'இன்னும் ஒரு வாரம் கொடைக்கானலில் இருந்துட்டு வாங்க; இதுவரை நீங்க டியூட்டியில் இருந்ததாகவே வைச்சுக்கிடலாம்' என்றார்.''

''தேவலாமே, - ரொம்ப நல்ல மாதிரியா இருப்பார் போலிருக்கே'' என்றாள் அம்புஜம்.

''நல்லவர்தான்'' என்று தலையாட்டிய நடராஜன் தொடர்ந்தார்: ''அப்புறம் நான் அவரைக் கேட்டேன், 'பிரமீளா தன் தாயாரை அடித்ததாகச் சொன்னாளே, எத்தனை தடவை அந்த டேபிள் லாம்பின் அடிவாரத்தால் தாக்கினாளாம்?' என்று.''

''என்ன, மறுபடியும் ஒரு முடிச்சு விழுந்துடுத்தா?'' என்று கேட்டார் பத்மநாபன்.

''புதுசா யாரும் போடலே; ஏற்கெனவே இருக்கிற மணிமுடிச்சைப் பக்குவமா படிப்படியா அவிழ்த்துக்கிட்டு வரேன். அவ்வளவுதான்; பாக்கியையும் கேளுங்க'' என்றார் நடராஜன்.

'எத்தனை தடவை அடித்தாய்?' என்ற கேள்வியை ஐ. ஜி. பிரமீளாவைப் பார்த்துக் கேட்கவில்லை. ஆனால் வாக்குமூலத்தில் அவள் 'அடித்தேன்' என்றுதான் சொல்லியிருந்தாளே ஒழிய, கீழே விழுந்தவளை இரண்டாம் முறையாகத் தாக்கியதாகக் கூறவில்லை. அப்படி நடப்பதும் சாத்தியமில்லை. தன் தாயாரை ஒரு தடவை அவள் ஆத்திரமடைந்து தாக்கியிருக்கலாம். ஆனால் அவள் பேச்சு மூச்சின்றிக் கீழே விழுந்ததும் பிரமீளாவுக்குச் சுய உணர்வு திரும்ப வந்து, 'ஐயோ! இப்படிச் செய்து விட்டோமே' என்றுதான் தோன்றியிருக்குமே தவிர மறுபடியும் அடிப்பதென்பது சாதாரணமாய் நடக்கக் கூடியதில்லை.

ஆனால் கனகத்தின் உடலைப் பரிசோதித்த டாக்டர் அவள் தலையில் இரண்டு இடங்களில் பலமான அடிபட்டிருப்பதாக நடராஜனிடம் கூறியிருந்தார். அந்த இரண்டாவது காயம் அவள் உடலைக் கோக்கர்ஸ்வாக் மலைச் சரிவில் உருட்டித் தள்ளியபோது ஏற்பட்டிருக்கலாம்; அல்லது....

கி. ராஜேந்திரன்

''எதற்கும் நீங்க அந்தப் பார்த்திபனைக்கொஞ்சம் வகையா கவனிக்கிறது நல்லது. ரத்தக் கறையோடு ஒரு பாறை அகப்பட்டதாகச் சொல்லிப் பாருங்களேன்'' என்று யோசனை தெரிவித்தார் நடராஜன் ஐ.ஜி.யிடம். அவர் கருத்துப்படி, பிரமீளாவையும் அழைத்துக் கொண்டு ஐ. ஜி.யே நேரில் போனார், பார்த்திபனிடம். 'பிரமீளா தன் குற்றத்தை ஒப்புக் கொண்டு வாக்குமூலம் எழுதிக் கொடுத்து விட்டாள்' என்றதும் பார்த்திபன் அவளுக்காக ரொம்பப் பரிதாபப்பட்டான்.

''அடடா! ஏன் இப்படிச் செய்தாய் பிரமீளா? என்னைக் காப்பாற்றும் நோக்கத்துடனா? என்னை இவர்கள் என்ன செய்திருக்க முடியும்? கொடைக்கானலில் நீங்கள் தங்கியிருந்த அதே ஹோட்டலில் நானும் வேறு ஓர் அறையில் மாற்றுப் பெயரில் தங்கியிருந்தேன் என்பதற்கு அதிகமாக இவர்கள் என்ன பழி சுமத்த முடியும்? இவர்களுக்கு எந்தவிதமான சாட்சியமும் இல்லாத போது இன்னும் ஒரு வாரத்தில் என்னை விடுவித்திருப்பார்கள். நான் உன்னிடம் ஓடோடியும் வந்திருப்பேன். அதற்குள் அவசரப்பட்டு உண்மையை ஒப்புக் கொண்டு உன் எதிர்காலத்தையே வீணடித்துக் கொண்டுவிட்டாயே!'' என்று கண் கலங்கி அனுதாபப்பட்டான்.

''இவளுடைய எதிர்காலம் பற்றி ஒன்றும் கவலை இல்லை'' என்றார் ஐ.ஜி. ''ஏனென்றால் இவள் குற்றத்தை ஒப்புக் கொண்டு வாக்குமூலம் கொடுத்திருந்த போதிலும் நாங்கள் இவள் மீது வழக்குத் தொடுக்கப் போவதில்லை!''

''அப்படியா? இதென்ன விநோதம்? போலீஸார் தங்கள் கடமையைச் செய்ய வேண்டாமா?'' என்றான் பார்த்திபன்.

''எங்கள் கடமை உனக்கு மரண தண்டனை பெற்றுத் தருவதுதான்!''

பார்த்திபன் பிரமித்தான்; பின்னர் சிரித்தான். ''விளையாடுகிறீர்களா? பிரமீளாவின் வாக்குமூலத்தைப் பெற்றுக் கொண்ட பிறகுமா என்மீது சந்தேகம் தீரவில்லை?''

''ஆமாம், இவள் ஒரு தடவைதான் தன் தாயாரைத் தாக்கியதாகச் சொல்கிறாள். ஆனால் கனகத்தின் உடலைப் பரிசோதித்த டாக்டர் தலையில் இரண்டு பலத்த காயங்கள் பட்டிருப்பதாகக் கூறுகிறார். கனகம் விழுந்து கிடந்த இடத்துக்குப் பக்கத்திலேயே உரித்த தேங்காய் அளவுக்கு ஒரு பாறை கிடைத்தது. அதில் ரத்தக் கறையும் படிந்திருக்கிறது. அந்தப் பாறை அவள் தலையில் அடிபட்டிருந்த இடத்துக்குச் சரியாகப் பொருந்தவும் செய்தது. டாக்டர் சாட்சியம் சொல்வார் இதற்கு. அந்தப் பாறையில் ரத்தக் கறை மீதாக ஓரிரு விரல் ரேகை அடையாளங்களும் கிடைத்தன. அவை உன் விரல் ரேகைகள்தாமா என்று இப்போது பரிசோதனைகள் நடந்து கொண்டிருக்கின்றன!''

இவ்வாறு ஐ.ஜி. கூறியதும் பார்த்திபன் முகம் வெளிறிவிட இடிந்து போனவனாய் அமர்ந்தான். பக்கத்திலேயே இருந்த அவன் வக்கீல், ''நீ ஒன்றும் இப்போ பேசாதே, பேச வேண்டிய அவசியமில்லை'' என்று எச்சரித்தார். ஆனால் அவர் குரலிலேயே நம்பிக்கை தொனிக்கவில்லை.

பார்த்திபன், ''இனிமேல் ஒன்றும் பிரயோசனமில்லை ஸார்!'' என்றான் வக்கீலைப் பார்த்து.

திடீரென்று பிரமீளா, ''அடப் பாவி! கொலைகாரா! என் அம்மாவைக் கொன்று விட்டாயே! சண்டாளா!'' என்றெல்லாம் அவனை வையத் தொடங்கிவிட்டாள். கூடவே விம்மி விம்மி அழவும் செய்தாள். என்ன நடந்திருக்க வேண்டும் என்பது அவளுக்குப் புரிந்துவிட்டது.

பார்த்திபனுக்கு ரோஷம் பொத்துக் கொண்டது. ''ஏன், நீ உன் அம்மாவைத் தலையில் அடித்தது அவளைச் சிரஞ்சீவியாக்கவா? நான் அவளை அடித்தது மட்டும் கொலை என்று தோன்றுகிறதா?'' — இப்படி அவன் சீறினான்.

''ஐயோ! உன்னை அவள் துப்பாக்கியால் சுட வந்ததால்தானே நான் அவளைத் தாக்கினேன்? உன் உயிரைக் காக்கத்தானே அப்படிச் செய்தேன்? அதற்கும், அவள் மயக்கம் தெளிந்து எழுந்த பிறகு நீ இரண்டாவது தடவையாக அவளை அடித்துக் கொன்றதற்கும் வித்தியாசம் இல்லையா?'' என்று கேட்டுத் தலையில் படீர் படீரென்று போட்டுக் கொண்டாள் பிரமீளா.

''ஆமாம்! சரியாகத்தான் ஊகித்து விட்டாய் பிரமீளா'' என்றான் பார்த்திபன், தலை குனிந்தபடியே. ''அவள் மீண்டும் விழித்தெழுந்து நம் அன்புக்குக் குறுக்கே நிற்பது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால்தான் கோக்கர்ஸ் வாக் ஓரமாய்க் கைக்குக் கிடைத்த ஒரு பாறையை எடுத்து அவள் தலையைப் பலம் கொண்ட மட்டிலும் தாக்கினேன்!''

பார்த்திபன் கூறியவற்றையெல்லாம் பக்கத்து அறையில் ஒரு டேப்ரிகார்டர் பதிவு செய்து கொண்டிருந்தது.

போதாக்குறைக்கு ஒரு ஸி. ஐ. டி.யும் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தார்.

''காதலுக்கு மட்டும்தானா அவன் குறுக்கே நின்றான்? பிரமீளாவின் பணத்தை நீ அடையவும் அவன் தடையாக இருந்தான் அல்லவா?'' என்று ஐ. ஜி. கேட்டார்.

''அதுவும்தான்!'' என்றான் பார்த்திபன்.



''மோசக்காரா! துரோகி! நய வஞ்சகமாக எவ்வளவெல்லாம் பேசி ஞய்?'' என்று பிரமீளா பொரிந்து தள்ளினுள்.

''உன்னை மனமாரக் காதலிப்ப தாக நான் சொன்னதிலொன்றும் பொய்க் கலப்பே கிடையாது, பிரமீளா! ஆனல் நீ வேறு, உன் மணம் வேறு என்று நான் பிரித்துப் பார்த்ததில்லை என்பதும் உண்மைதான்'' என்ருன் அவன்.

மேற்படி நிகழ்ச்சிகளை விவரித்து விட்டு டி. ஐ. ஜி., ஸி. ஐ. டி. நடராஜன் பெருமிதத்துடன் கூறினுர்: ''இரண்டு மணி நேரம் கழித்துச் சென்னையிலிருந்து ஐ. ஜி. மறுபடியும் எனக்கு ஃபோன் போட்டுப் பேசினுர். 'உங்க ஊகம் பிசகில்லே; பார்த்திபன் எல்லாத்தையும் ஒப்புத்துக்கிட்டான்'னு சொன்ஞர்.''

ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்த பத்மநாபன் குடும்பத்தினரிடமிருந்து ஒரே சமயத்தில் பல கேள்விகள் பிறந்தன.

நடராஜன் சிரித்துக் கொண்டே, ''ஒவ்வொரு கேள்விக்கா பதில் சொல்லிக்கிட்டு வரேன். முதலில் பத்மநாபன் ஸார் கேட்கட்டும்!'' என்ருர்.

''ஐ. ஜி., பார்த்திபனிடம் சொன்னதில் எவ்வளவு தூரம் நிஜம்?'' என்று வினவினுர் பத்மநாபன்.

'' 'உரித்த தேங்காய் அளவுக்கு, ரத்தக் கறையுடன் ஒரு பாறை அகப்பட்டது' என்று சொன்னுரே அதுவும், அது சம்பந்தப்பட்ட இரு விஷயங்களும் — அதாவது அந்தப் பாறை காயத்தில் சரியாகப் பொருந்தியிருந்தது என்பதும் விரல்ரேகை அடையாளம் அகப்பட்டது என்பதும் — மட்டும் பொய்தான். ஆனல் வள்ளுவர் என்ன சொல்லியிருக்கிருர் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்க.''

''புரைதீர்ந்த நன்மை பயக்குமெனில் பொய்யும் மெய்யேயாகும்'' என்ருள் மீனு.

''அடுத்த கேள்வி?'' — அம்புஜத்தைப் பார்த்தார் நடராஜன்.

''ஹோட்டலில் அடிவாங்கிக்கொண்டு மயங்கி விழுந்த கனகம், கோக்கர்ஸ் வாக்குக்கு எப்படி வந்து சேர்ந்தாள்? கதையின் அந்தப் பகுதி விட்டுப் போச்சே!''

''இது நல்ல கேள்வி. கொஞ்சம் விவரமாகத்தான் சொல்லணும்'' என்று ஆரம்பித்தார் நடராஜன்.

மிக அருகில் இருக்கும் போதே தன் கண்களில் மண்ணைத் தூவிவிட்டுக் கள்ளத்தனமாகப் போய்ப் பார்த்திபனைத் தனிமையில் தன் மகள் சந்தித்து வந்திருக்கிருள்; பல நாட்களாகவே இந்த நாடகம் நடந்து கொண்டிருக்கிறது என்பதையும் இவை உரையாடலோடு நிற்காமல் உடலுறவு கொள்ளும் சந்திப்புகள் என்பதையும் நொடிப் பொழுதில் புரிந்து கொண்டுவிட்ட கனகத்துக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. உணர்ச்சி மிகுதியினுல் அவளுக்குத் தொண்டை எழும்ப மறுத்தது. பார்த்திபனை ஏசியபோதும் குரல் கரகரத்துக் கம்மியே இருந்தது. அதனுல் அக்கம் பக்கத்து அறைகளிலிருந்த யாரும் விழித்தெழுந்து வரவில்லை.

பிரமீளா டேபிள் லாம்ப்பின் அடிவாரத்தால் தாக்கியபோதும் அவள் கண்டத்திலிருந்து கூக்குரல் ஏதும் எழவில்லை. கணப் போதில் அவள் நினைவிழந்து சரிந்தாள்; தரையில் பேச்சு மூச்சின்றிக் கிடந்தாள். அவள் இறந்துவிட்டாள் என்றே பிரமீளாவும் பார்த்திபனும் முடிவு கட்டி விட்டார்கள். பிரமீளா அதிர்ச்சி நீங்கப் பெற்றதும் விம்மி அழத் தொடங்கினுள்.

பார்த்திபன் அவசரம் அவசரமாகக் கட்டிலைவிட்டு இறங்கி வந்து அறை வாசல் கதவைச் சாத்தினுன். பிறகு பிரமீளாவை ஆசுவாசப்படுத்தினுன். ''அழாதே பிரேம்! பக்கத்து அறையில் இருப்பவர்கள் கேட்டுவிட்டு, என்ன ஏது என்று விசாரிக்க வந்துவிடப் போகிருர்கள்'' என்ருன் கெஞ்சுகிற குரலில்.

''வந்தால் வரட்டும்; தாயாரைக் கொன்ற இந்த மகாபாவியைப் போலீஸில் ஒப்படைக்கட்டும். தூக்கிலே தொங்குகிறேன்'' என்ருள் பிரமீளா, மனம் நொந்து போய்.

''பிரேம்! தயவுசெய்து நான் சொல்வதைச் சற்றுக் கேளேன்'' என்று பரபரப்புடன் அவள் முகவாயைப் பிடித்துக் கொண்டு மீண்டும் இறைஞ்சினுன் பார்த்திபன். தொடர்ந்து பேசினுன்: ''கொலைக் குற்றத்துக்காக மரண தண்டனை பெற்ருலும் பாதகமில்லை; பிரேம். அதைத் தாங்குவது அவ்வளவு கஷ்டமில்லை. ஆனல் தாயாரைக் கொன்ற பழியல்லவா உனக்கு வந்து சேரும்? ஊரார் எப்படியெல்லாம் ஏசுவார்கள் உன்னை! மேலும் நீ காதலனுடன் உறவுகொள்ள அவன் அறைக்குக் கள்ளத்தனமாக நடு இரவில் வந்தாய் என்பதுமல்லவா எல்லாத் தினசரிகளிலும் வெளிவந்துவிடும்! எவ்வளவு அவமானம்! உன் உணர்ச்சிகளை யாராலும் புரிந்து கொள்ளவே முடியாது. உன் தாயார் பெரிய தியாகியாகிவிடுவாள் உலகத்தின் கண்களில். நீ ஒரு



வண்ணங்களில் உங்கள் எண்ணத்தை
பிரதிபலிக்கச் செய்யும்
அசல் காஞ்சீபுரம் பட்டுப்புடவைகளை
நியாய விலையில் தேர்ந்தெடுக்க சிறந்த இடம்

# கோ-ஆப்டெக்ஸ்

குறளகம், தி. நகர், லஸ் மற்றும்
காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி.

பயங்கரப் பெண் பேய், அரக்கி என்றெல்லாம் வர்ணிக்கப்படுவாய்! தூக்கிலே தொங்குவது பெரிய விஷயமில்லை; இந்த அவமானங்களையெல்லாம் எப்படிப் பொறுத்துக் கொள்வாய், சொல்லு!''

பிரமித்துப்போன பிரமீளா மெல்லத் தலையசைத்து இந்த ஏச்சுப் பேச்சுக்களைத் தாங்கிக் கொள்ளத் தன்னால் முடியாது என்பதை உணர்த்தினாள்.

''அப்படியானால் நான் சொல்கிறபடி செய், பிரேம்!'' என்றான் பார்த்திபன். ''பேசாமல் வந்த வழியாகவே திரும்பிப் போய் உன் அறையில் படுத்துக் கொள். அம்மா கொண்டு வந்த துப்பாக்கியைப் பின்னோடு எடுத்துப் போய் அது முன்பு இருந்த இடத்திலேயே வைத்துவிடு. நாளை பிற்பகலில் போலீஸாரிடம் போ. டி.ஐ.ஜி.கூட இங்கு வந்து ஹாப்பி ஹாலிடேயில் தான் தங்கியிருக்கிறதாகக் கேள்வி. அவரிடமேகூடப் போகலாம். காலையில் உன் அம்மா 'ஷாப்பிங்' என்று கால் நடையாகக் கிளம்பினாள் என்றும், திரும்பி வரவேயில்லை, என்ன ஆனாளோ தெரியவில்லை என்றும் கவலைப்படுவது போல் பேசு. மற்றவற்றை நான் கவனித்துக் கொள்கிறேன். உன் 'கைப்பை'யில் கார்ச் சாவி இருந்தால் அதை மட்டும் கொடுத்துவிட்டுப் போ. அதன் உபயோகம் முடிந்ததும் காரிலேயே வைத்து விடுகிறேன். நீ எடுத்துக் கொள்ளலாம். என்ன புரிந்ததா? நல்லவேளையாக உன் டிரைவர் கோபாலன் பெண்டாட்டிக்கு உடம்பு சரியில்லை என்று தந்தி வந்து புறப்பட்டுப் போயிருக்கிறான். இல்லாவிட்டால் அவனைச் சமாளிக்க வேறு யோசனை பண்ண வேண்டும்!''

''நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று பயத்தில் நடுங்கிய குரலில் கேட்டாள் பிரமீளா.

அவன் சுருக்கமாகத் தன் திட்டத்தை விவரித்தான். ''உம், சீக்கிரம்!'' என்று துரிதப்படுத்தினான். அவள் விதியே என்று தன் மனத்தைத் தேற்றிக் கொண்டு அவன் சொற்படி நடந்தாள். அவள் தன் அறைக்குத் திரும்பிச் சென்றதை யாரும் பார்க்கவில்லை. படுக்கையில் விழுந்து விடிய விடிய அழுதாள்.

பிரமீளா கொடைக்கானலுக்கு வந்த பிறகு கனகம் அல்லது கோபாலன் கண்களில் பட்டுவிடக் கூடாதென்பதற்காகப் பார்த்திபன் தன் அறையை விட்டு அதிகமாக வெளியே எங்கும் போகவில்லை. ஆனால் பிரமீளா வந்து சேர்வதற்குமுன், இரண்டு நாட்கள் நன்கு சுற்றிப் பார்த்திருந்தான். கோக்கர்ஸ் வாக்கில் கனகத்தின் உடலை



''என் மச்சானுக்கு, ஒரு தரித்திர படத்திலே ... கன்னாரா நடிக்கிறவாய்ப்பு கிடைச்சதும், கண்ணம்மா பேட்டை முனிசாமின்னு என்கிற தன் பெயரை முகேஷ் கண்ணா என்று மாற்றி வச்சுக் கிட்டார்!''

உருட்டிவிட்டு விட்டால் எலும்புகளைக் கூடப் பொறுக்க முடியாது; கொலை நடந்தது என்றே யாரும் எண்ண இடமில்லை. அப்படியே உடல் கண்டெடுக்கப்பட்டாலும் 'விபத்து; சறுக்கி விழுந்து விட்டாள்' என்றுதான் கருதுவார்கள். அதற்கேற்றாற்போல் பிரமீளாவும் போலீஸில் 'தாயாரைக் காணோம்' என்று புகார் கொடுத்திருப்பாள். அதே நேரம் இவனும் பஸ்ஸைவிட்டு இறங்கிக் கொடைக்கானல் ரோடு ஸ்டேஷனில் சென்னை செல்லும் பஸ்ஸுக்காகக் காத்திருப்பான்.

இப்படி ஒரு சில நிமிஷங்களில் தீர்மானித்துவிட்ட பார்த்திபன் கனகத்தின் உடலைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டும் சில இடங்களில் இழுத்துக் கொண்டும் ஹோட்டல் வாசலை நோக்கிச் சென்றான். தப்பித் தவறி யாராவது பார்த்துவிட நேர்ந்து கையும் களவுமாய்ப் பிடிபட்டால் அப்போது, பிரமீளா செய்த காரியம் இது என்று உண்மையைச் சொல்லித் தான் தப்பித்துக் கொள்ளலாம் என்ற எண்ணமும் அவன் மனத்தில் அடிவாரத்தில் இருந்து, அதுவே அவனுக்குத் திட்டத்தைத் தொடரத் துணிவையும் தந்தது.

அதிர்ஷ்டம் அவன் பக்கம் இருந்தது. யாரும் எதிர்ப்படவில்லை. ரிஸப்ஷன் கவுண்டரில் ஒருவன் அமர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். வாசல் கதவு சாத்தி இருந்தது. ஆனால் சாவி அதற்குரிய துவாரத்திலேயே இருந்தது. ஓசைப்படுத்தாமல் செயல்பட்டான் பார்த்திபன். வெளியே வரிசையாக நிறுத்தப்பட்டிருந்த பல கார்களிடையே பிரமீளாவின் காரைச் சுலபமாகக் கண்டுபிடித்தான். நிலவொளி இருந்தது என்பதோடு அயல்நாட்டில் உருவான பெரிய காரை அடையாளம் கண்டுகொள்வது கடினமாயுமில்லை. ஒன்றிரண்டு அம்பாஸிடர் கார்களில் குளிருக்கு அடக்க

மாகக் கண்ணுடிகளை உயர்த்தி விட்டு விட்டு டிரைவர்கள் உறங்கிக் கொண்டிருந்தார்கள். கண்ணுடிகளை உயர்த்திய போது அவர்கள் குளிரோடு சப்தத்தையும் வெளியே நிறுத்தி விட்டார்கள்.

சுற்றுவட்டாரத்தில் மலைகளெல்லாம் நிலாவை எட்டிப் பிடித்து விழுங்கிவிட ஆசை கொண்ட அசுரர் போல் சிகரங்களை உயர்த்திக் கொண்டு நின்றன. ஆனால் அவற்றின் முயற்சி படுதோல்வி அடைய, அம்புலி கவலை சிறிதும் இன்றித் தன் காதலனை நோக்கிற்று. காதலி சொரியும் அன்பெனும் நிலவொளியில் குளித்து ஏரி நீர்ப்பரப்பு மோன மயக்கத்தில் ஆழ்ந்து கிடந்தது.

மனோரம்மியமான இந்தச் சூழலில் மகா பயங்கரமான காரியத்தைச் செய்து கொண்டிருந்தான் பார்த்திபன். 'கேட்'டைத் திறந்துவிட்டு வந்தான். உயர்ந்த அயல்நாட்டுத் தயாரிப்பான பிரமீளாவின் கப்பல் மாடல் கார், கதவுகளைத் திறந்து மூடியபோதும் எஞ்சினைக் கிளப்பியபோதும் அதிகமாகச் சத்தப்படுத்தவில்லை. வழுக்கிக் கொண்டு விரைந்தது. பின் ஸீட்டில் கனகம் கிடத்தப்பட்டிருந்தாள்.

நடராஜன் கதையை நிறுத்தினர்.

''இரவு நேரமானதால் கோக்கர்ஸ் வாக் பக்கம் ஜனநடமாட்டம் இருந்திருக்காது. காரிலிருந்து கனகத்தை இறக்கி இழுத்துக் கொண்டு போயிருப்பான்'' என்றாள் அம்புஜம்.

''அந்தச் சமயம் அவள் மயக்கம் தெளிந்து விழித்துக் கொண்டு, 'நான் எங்கே இருக்கேன்? நீ யாரு'ன்னு ஏதாவது கேட்டிருப்பாள். 'இத்தனை பாடு பட்டு இவளை இங்கே கொண்டு வந்த பிறகு மறுபடியும் உயிரோடு திருப்பி அழைத்துச் செல்வதா ? திட்டத்தைக் கடைசிவரையில் நிறைவேற்றி விடுவோம்' என்று முடிவு செய்து பார்த்திபன் ஒரு பாறையை எடுத்து அவளை வேலை தீர்த்து விட்டான்'' என்றார் பத்மநாபன்.

''பிறகு அவள் உடலையும் அவளை அடிக்கப் பயன்படுத்திய கல்லையும் மலைச் சரிவில் உருட்டி விட்டான். கல் அதள பாதாளத்துக்குப் போய்விட்டது. உடல் கீழே செல்லாமல் ஒரு பாறை தாங்கித் தடுத்து நிறுத்திவிட்டது. அதுவே அவன் திட்டத்தை ஐந்தாண்டுத் திட்டமாக்கிவிட்டது — அதாவது படுதோல்வி அடையச் செய்து விட்டது !'' என்றாள் மீனு.

''பாலிடிக்ஸில் பட்டுக்காமல் பேசறேன்'' என்ற நடராஜன் தொடர்ந்தார் : ''தன் திட்டம் பிசுபிசுத்து விட்டதை உணராமலேயே அவன் காரை மறுபடி ஹோட்டலுக்கு ஓட்டிச் சென்றான். கர்ச்சீப்பை எடுத்துக் காரில் விரல் ரேகைகள் பதிந்திருக்கக்கூடிய இடங்களைத் துடைத்தான். தன் அறைக்குப் போய்ப் படுத்துக் கொண்டான். அதிகாலையில் ஹோட்டல் அறைக்குக் கணக்குத் தீர்த்துவிட்டு மலையிலிருந்து இறங்கிவிட்டான்.''

கதையை இப்படி அவர் முடித்து வைத்ததும் அம்புஜம் தன் கணவரைப் பார்த்துச் சொன்னாள்: ''நான் ஒரு முதல்தரமான நடிகை என்பதைப் பிரமீளா எப்படி நிரூபிச்சிருக்கா பார்த்தேளா? நடராஜன் ஸாரையே ஏமாற்றி விட்டாளே !''

''அதில் அதிசயமில்லை; அவள் தொழிலே அதுதானே !'' என்றார் பத்மநாபன். ''ஆனால் திருச்சேறை நடிச்சதைச் சொல்லு ! அவள் தகப்பன் தான்தான் என்று என்னை நம்ப வைச்சுட்டானே !''

''கனகம் பிரமீளாவின் சொந்தத் தாய் இல்லையாம். யாரோ ஏழைப் பிராமணன் கனகத்திடம் தன் குழந்தையை விட்டுவிட்டுப் போயிருக்கிறான். ''அதனால்தான் அம்மாவுக்கு என்னிடம் ஓர் ஆத்மார்த்தமான அன்பு கடைசி வரை ஏற்படவேயில்லை' என்று பிரமீளா கூறியிருக்கிறாள்'' என்றார் நடராஜன். ''ஒரே ஒருநாள் இவளைப் பெற்ற தகப்பன் வந்தபோது கனகம் ஆயிரம் ரூபாய் பணத்தைக் கொடுத்து விரட்டினளாம். 'நான் பணத்துக்காக வரலை; குழந்தையைப் பார்க்கக்கூடாதுன்னு சொல்லிட்டீங்க. நான் வரேன்'னு கிளம்பிட்டானாம். வரவேற்பு அறையில் இருந்த நிலைக் கண்ணாடியில் பிரதிபலித்த அவன் உருவத்தை ஒன்றிரண்டு விநாடிகளுக்குத்தான் பார்த்தாளாம் பிரமீளா. அது முதல் அவளுக்கு ஒல்லியா, உயரமா, உச்சிக் குடுமியோடே காட்சி தருகிற வயசான பிராமணன் யாரையாவது பார்த்தால் பரிவு உணர்ச்சி பொங்கி எழுமாம். அதனால்தான் திருச்சேறையிடமும் அத்தனை பிரியமாகப் பேசியிருக்கிறாள்.''

''சரி, இந்தக் கதை முடிஞ்சுது : தினகரனைப் பற்றியும் சொல்லிடுங்கோ'' என்றாள் அம்புஜம்.

''ஆதவனை ஆராயும் இந்த நிலையத்தில் வைத்து நாம் அல்பாயுசில் மடிந்த தினகரனை ஆராய வேண்டாம்! ஏரிக் கரைக்குப் போகலாம். அதோ நம்ம பஸ்ஸும் கிளம்பிடுச்சு'' என்றார் நடராஜன்.

(தொடரும்)

பாசம், தியாகம், நட்பு, கற்பு, போன்ற
குணநலன்களைச் சிறப்பாகச் சித்திரிக்கும் குடும்பப் படம்.



விஜயா புரொடக்ஷன்ஸ்
அளிக்கும்

பாலன்
கம்பைன்ஸ்

# பதிலுக்கு பதில்

டைரக்ஷன்:
ஜம்பு

தயாரிப்பு:
K.R.பாலன்

# ...இட்டால் இதமளிப்பு



# டெட்டால் அரவணைப்பு

**காயங்களைத் தூய்மைப் படுத்துவதோடன்றி ஆற்றவும் துணை டெட்டால்.**

பட்ட காயம் எதுவாயினும் இட்டுப் பயன்காணத் தட்டாமல் உதவுவது டெட்டால். உங்கள் டாக்டரே கூறுவார்: ஒழுங்கு தவறாமல் காயத்தின் மீது அடிக்கடி இட்டால், கிருமிகள் அணுகாமல் காக்க உதவுவது டெட்டால்...பரிபூரணமான ஆன்ட்டிஸெப்டிக் பாதுகாப்பு அது.

குளி நீரிலே இட்டால்: புத்துணர்வூட்டுகிறது டெட்டால்.

சுகவரத்திற்கான நீரிலே: பாதுகாக்கிறது டெட்டால்.

**புதுமைக் கோல டெட்டால்**– *பரிபூரண ஆன்ட்டிஸெப்டிக் பாதுகாப்பு*




**RCI** ரெக்கிட் & கால்மென் ஆஃப் இந்தியா லிட்.
பார்மஸ்யூட்டிகல் டிவிஷன்

லிண்டாஸ் · DTL-6-140 TP

# இளைஞர் சமுதாயம்

## 20. விஞ்ஞானத்தில் விழிப்பு

**மா**ணவர்களுக்குப் பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் சர்ட்டிபிகேட்டுகளும், மெடல்களும் கொடுப்பதைப் பார்த்திருக்கிறோம். ஆனால், மாணவர்களே மற்ற மாணவர்களுக்குப் பயிற்சி அளித்துத் தேர்வு வைத்து அதில் முதன்மையாகத் தேறும் மாணவர்களுக்குப் பரிசளிக்கும் அதிசயம் கண்டிருக்கிறீர்களா?

இந்த அதிசயத்தை மதுரை ஸயன்ஸ் க்ளப் அங்கத்தினர்கள் நடத்துகின்றனர். மதுரையில் உள்ள சுமார் பன்னிரண்டு ஆண், பெண் உயர்நிலைப் பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களுடன் தொடர்பு கொண்டு அவர்களுடைய ஒத்துழைப்புடன் மாணவ, மாணவியர்களுக்கு விஞ்ஞானம் போதிக்கிறார்கள். எப்பொழுது போதிக்கிறார்கள் தெரியுமா? பள்ளிக்கூடம் விட்ட பிறகு ஆறு மணியிலிருந்து ஏழரை மணி வரையில் ஸயன்ஸ் வகுப்புகள் நடத்துகின்றனர். பிறகு Science Talent Examination என்று ஒரு தேர்வு வைக்கிறார்கள். அந்தத் தேர்வுக்கான கேள்வித் தாள்களை இம்மாணவ அங்கத்தினர்களே தயாரிக்கிறார்கள். இந்தத் தேர்வில் தேறும் மாணவ, மாணவியர்களுக்குத் தங்க மெடல், வெள்ளி மெடல் வழங்குகின்றனர். 1967ம் ஆண்டு ஆரம்பமான இச் சங்கம் மிகவும் சிறப்பாக இயங்கி வருகிறது. மாணவ அங்கத்தினர்களின் துடிப்பும், வேகமும் நம்மைப் பிரமிக்க வைக்கின்றன.

மதுரை ஸயன்ஸ் க்ளப் என்ற பெயரையும் இவர்கள் தயாரித்திருக்கும் பரீட்சைக்கான வினாத் தாள்களையும் பார்த்து விட்டு நான் இந்தச் சங்கம் பெரிய கட்டிடத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் என்று நினைத்து ஏமாந்து போனேன்.

இதை நான் சொன்னதுதான் தாமதம். செயலாளர் வெடித்தெழுந்தார். ''ஸார், இதயம் என்ற உறுப்பு மிக மிகச் சிறியது. ஆனால் அதனுடைய சக்தி அளவிடற்கரியது. சரீரத்தை அந்த ஒரு சின்ன உறுப்புத்தானே இயக்குகிறது? தயவு செய்து எங்கள் சங்கத்தின் இடத்தைப் பார்த்து எங்கள் சேவையைக் கணக்கிடாதீர்கள்; அங்கத்தினர்களாகிய எங்கள் எண்ணிக்கையைப் பார்த்தும் கணக்கிடாதீர்கள்.



நாங்கள் செய்யும் சேவையைப் பார்த்து, அதன் தரத்தைப் பார்த்து, பரவலாக அது மாணவர் சமுதாயத்துக்குப் பயன்படும் விதத்தைப் பார்த்து மதிப்பிடுங்கள். அப்பொழுதுதான் நீங்கள் உங்கள் பணியை நியாயமான முறையில் செய்தவராவீர்கள்!'' என்று ஆவேசமாகக் கூறி விட்டுச் சங்கத்தின் சாதனைகளைக் குறிக்கும் ஃபைல்களை அள்ளி என் எதிரில் போட்டார்.

இளைஞர் சமுதாயத்தைப் பேட்டி கண்டு எழுத ஆரம்பித்ததி லிருந்து ஒவ்வொரு மன்றத்திலும் நான் நிறையக் கேள்விகள் கேட்பது வழக்கம். ஆனால் இந்த ஸயன்ஸ் க்ளப் அங்கத்தினர்கள் ரொம்பவும் பொல்லாதவர்கள்; ஆக்க ரீதியில் செயல்பட்டு வருகிறவர்கள்! ஒவ்வொரு மாணவரும் எழுந்து தம் வேலை விவரங்களையெல்லாம் எடுத்து விவரமாகக் கூறி விட்டார்.

நான் இடையில் புகுந்து கேள்வி கேட்க முயன்றும் பலன் இல்லை. ஏனெனில் அப்பொழுதெல்லாம் இச் சங்கத்தின் பொதுச் செயலாளரான திரு எஸ். பாலசுப்பிரமணியம் எம். ஏ., குறுக்கிட்டு, ''ஸார், நாங்களெல்லோரும் விஞ்ஞான ரீதியிலேயே விஷயங்களை அணுகுகிறோம், விஞ்ஞான ரீதியிலேயே விஷயங்களுக்குத் தீர்வு காண்கிறோம். ஆகவே, நாங்கள் சொல்வதைக் கொஞ்சம் பொறுமையோடு கவனமாகக் கேட்டால் நீங்கள் கேள்வி கேட்பதற்கே அவசியம் இராது...!'' என்று ஒரே போடாய்ப் போட்டுக் கொண்டிருந்தார்.

இச் சங்கத்தின் மாணவர்கள் என்னென்ன பாடங்களை நடத்துகிறார்கள் என்று பார்க்க வேண்டாமா?

பரிணாமம், புகைப்படக் கலை, சினிமாக் கலை, விண்வெளி விஞ்ஞானம், ஆழ்கடல் ஆராய்ச்சிக் கலை (Oceanography), டிரான்ஸிஸ்டர், துரித கணிதம், அணு ஆராய்ச்சி இயல் ஆகிய விஞ்ஞானத் துறை





மதுரை ஸயன்ஸ் க்ளப்பின் தலைவரும், செயலாளர்களும்

களில் மாணவர்களுக்குப் பள்ளிகள்தோறும் சென்று வகுப்பு நடத்துகிறார்கள். நேரடியாக விளக்கியும் காட்டுகிறார்கள்.

துரித கணிதம் மிகவும் விநோதமானது. எத்தனை பெரிய தொகை பெருக்க வேண்டுமானாலும் வாய்ப்பாடை நினைவுபடுத்திக் கொண்டு சிரமப்படுத்திக் கொள்ள வேண்டியதில்லை. மிக மிக விரைவு வழி வைத்திருக்கிறார்கள். பள்ளி மாணவர்களுக்கு இம்முறையில் பயிற்சி அளிக்கிறார்கள்.

Speed System of Basic Mathematics என்ற திட்டத்தைக் கண்டுபிடித்தவர் ட்ராச் சென்பெர்க் என்ற ருஷ்ய மேதை. இந்தத் துரித முறை வேகமாகக் கணக்குப் போட உதவுவதோடல்லாமல், மிக மிக எளிதாகவும் இருக்கிறது. அந்த ருஷ்ய மேதை ஹிட்லரின் கொடூர ஆட்சிப் பிடியில் சிக்கிப் பல ஆண்டு சிறைவாசம் செய்தவர். சிறைவாச நாட்களை வீணாக்காமல் இந்த விரைவு கணக்கு முறையைப் பற்றிச் சிந்தித்துத் திட்டமிட்டார்.

இந்தச் சங்க அங்கத்தினர்கள் அதிசய மனிதரும் விஞ்ஞான மேதையுமான திரு ஜி. டி. நாயுடுவைக் கண்டு தங்கள் செயலை எடுத்துச் சொல்லியிருக்கின்றனர். அவர் தரம் உயர்ந்த பல விதைகளைக் கொடுத்தனுப்பிப் பயிரிடும் விதத்தையும் கூறியிருக்கிறார். அவற்றைப் பல பள்ளிகளுக்கு அனுப்பிப் பயிரிடச் செய்து விஞ்ஞானரீதியில் வளர்ச்சியைக் கணக்கிட்டு மாணவர்களின் ஆராய்ச்சி அறிவை வளர்த்திருக்கிறது சங்கம்.

இந்தச் சங்கத்தின் நிகழ்ச்சிகளில் அவர்கள் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்ளும் நிகழ்ச்சி ஐந்தாவது ஆண்டு விழாவாகும். மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் மு. வரதராசனார் அந்த விழாவுக்குத் தலைமை வகித்ததுதான் அவர்கள் பெருமைக்குக் காரணம்.

இச்சங்கத்துக்கு இப்பொழுது தேவைப்படுவதெல்லாம் நிதி வசதிதான். அதைப் பெருக்கிக்கொள்ள இம்மாணவர்கள் பல திட்டங்கள் வகுத்து வருகின்றனர். கடிகார முள் மாதிரி இடைவிடாமல் திட்டங்கள் வகுத்துக் கொண்டு செயல்படுகிறார்கள் மாணவர்கள். ஆனால் பரீட்சை நெருங்கும் சமயத்தில் 'கப்-சிப்' பேசப்படாது! எல்லா நிகழ்ச்சிகளும் ரத்துசெய்யப்பட்டு விடும். அவர்களும் மாணவர்களாயிற்றே, படிக்க வேண்டுமே?

இந்தச் சங்கத்தைத் தொடங்கியவர் திரு எஸ். எல். பிரசாத். இவர் இப்பொழுது டில்லியில் நல்ல வேலையில் இருக்கிறார்.

இச்சங்கத்தின் பெரு முயற்சியாகப் பாராட்டிக் கூறவேண்டிய விஷயம் பொருட்காட்சி— அதுவும் விஞ்ஞானப் பொருட்காட்சி. இதில் அனைத்து மதுரைப் பள்ளி மாணவர்களும் பங்கு கொள்ளுகிறார்கள். அவர்கள் இதை அறிவியல் கண்காட்சி என்று கூறுகின்றனர்.

மதுரை ஸயன்ஸ் கிளப், 54, பைகாரா போண்ட், திருப்பரங்குன்றம் ரோடு, மதுரை-17 என்ற விலாசத்தில் இப்போது இயங்கி வருகிறது. விஞ்ஞானத்தில் ஈடுபாடு உள்ள மற்ற மாணவர்களும் இவர்களோடு தொடர்பு கொள்ள வேண்டும் என்று இச்சங்கம் குறிப்பிட்டதால் இவர்களது விலாசத்தைக் கொடுத்திருக்கிறேன். — ஸோமாஸ்

## ஓவியக் கண்காட்சி

இந்தக் காலத்தில் ஓவியக் கண்காட்சி நடத்துவதென்றால் முதலிலேயே அங்குள்ள படங்களுக்கான விளக்கத்தை நம் கையில் கொடுத்து விடுவார்கள். அதில் குறிப்பிட்டுள்ள விளக்கங்களைப் படித்துக் கொண்ட பிறகும் நம்மால் அந்தப் படங்களைப் பற்றி அதிகம் புரிந்து கொள்ள முடியாது. இப்போதெல்லாம் அப்படிப்பட்ட நவீன பாணி ஓவியக் கண்காட்சிகளைத்தானே நடத்துகிறார்கள்? இப்படிப்பட்ட சூழலில் துணிந்து வேறுவிதமான ஓர் ஓவியக் கண்காட்சி நடைபெற்றது.

ஓவியங்களெல்லாம் பண்டைய முறைப்படி வரையப்பட்டவை மட்டுமல்ல, நமக்கு மிகவும் பழக்கப்பட்ட புராண இதிகாசங்களின் காட்சிகளையும் கதாநாயக நாயகிகளையும் கொண்டதாகவும் இருந்தன. இந்தக் கடவுளர்களின் தெய்விக உருவங்கள் பக்தியூட்டும் வகையில் தீட்டப்பட்டிருந்தன. ஆகஸ்டு மாதம் ஆறு ஏழு தேதிகளில் சென்னை தியாகராயநகர் ராமகிருஷ்ணமிஷன் உயர்நிலைப்பள்ளியில் நடந்த இந்த ஓவியக் கண்காட்சி படங்களின் சிறப்பைக் கண்டு பூரித்துப் போய் நின்றபோது அவைகளைத் தீட்டியவர் யார் என்பதையும், எப்படி எந்தக் கால கட்டங்களில் வரைந்தார் என்பதையும் அறிந்தபோது வியப்பு அதிகமாயிற்று.

இந்த ஓவியங்களைத் தீட்டியவருக்கு இன்று அறுபத்தைந்து வயதுக்கு மேலாகிறது. அவர் ஒரு பெண்மணி. ஸ்ரீமதி விஜயம் ராஜகோபாலம்மாள் என்பது அவர் பெயர். ஓவியக் கலை அவருக்கு இயல்பாக வந்த ஒன்று. இதற்காக அவர் கல்லூரி சென்று கற்கவில்லை. சிறு வயதிலேயே படங்கள் வரைவார். குடும்பப் பொறுப்பேற்ற பின் நாற்பது வருஷங்கள் வரை தூரிகையைத் தொடவேயில்லை. 'சம்சாரமோ சாகரமோ' என்பார்களே, சும்மாவா? அதன் பிறகு மறுபடியும் விட்ட கலையைத் தொட்டுப் பார்க்கலானார். 1966 முதல் திரும்பவும் சித்திரங்கள் வரையலானார். நீர் வண்ணப் படங்கள், தைல வண்ணப் படங்கள் இரண்டிலுமே இவரது கைவண்ணத்தைக் காண முடிகிறது. கல்கத்தாவில் பல தடவை கண்காட்சிகள் நடத்திப் பாராட்டும் பெற்றிருக்கிறார்.



பழமை சம்பிரதாயத்திலிருந்து கொஞ்சமும் மாறாத இவரது தோற்றம் எப்படி மனத்துக்கு அமைதியைத் தருகிறதோ அதேபோல் இவரது பழமை சம்பிரதாயப் படங்களும் உள்ளன. - வி. கே. எம்.

## இர்து சமய மன்றம், காஞ்சிபுரம்

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளின் பூரண அருளாசியுடன் ''இந்து சமய குழந்தைகள் மன்றம்'', ''இந்து சமய மாணவர் மன்றம்'', ''இந்து சமய மாதர் மன்றம்'' ஆகிய அமைப்புகளைக் கொண்ட ஓரமைப்பு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஊரிலும் இம்மூவகை மன்றங்களை நிறுவ முன்வர வேண்டும். எட்டு வயது முதல் பதினான்கு வயது வரை உள்ளவர்கள் 'இந்து சமய குழந்தைகள் மன்ற'த்தையும், பதினைந்து வயது முதல் முப்பது வயதுள்ள இளைஞர்கள் 'இந்து மாணவர் (சமய) மன்ற'த்தையும், மாதர்கள் அனைவரும் சேர்ந்து 'இந்து சமய மாதர் மன்ற'த்தையும் ஒவ்வொரு ஊரிலும் அமைத்துக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு ஊரிலும் மன்றம் அமைத்துக் கொள்பவர்கள், 'அமைப்பாளர், இந்து சமய மன்றம், 12, சாலை வீதி, காஞ்சிபுரம்-2' (செங்கற்பட்டு ஜில்லா) என்ற விலாசத்துக்கு செப்டம்பர் மாதம் 20ஆம் தேதிக்குள் தெரியப்படுத்தினால் பணிகள் பற்றிய விவரங்கள் இலவசமாக அனுப்பி வைக்கப்படும். மன்ற அமைப்புக்களுக்குக் கட்டணம் ஏதுமில்லை. உறுப்பினர்களையும் இலவசமாகவே அமைத்துக் கொள்ள வேண்டும்.

ஸ்ரீஜயந்தியன்றுதான் ரசிகமணி டி. கே. சி. அவர்கள் பிறந்தார்கள். இதுவரை பிரசுரமாகியிராத அவரது இந்தக் கட்டுரையைப் பிரசுரித்து அஞ்சலி செலுத்துகிறோம்.



# கடவுள் தத்துவம்

ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார்

சமுத்திரத்தைப்பற்றிக் கொஞ்சம் ஆராயலாம். சமுத்திரமானது உலகம் முழுவதும் பரவி வியாபித்திருக்கிறது என்பது சாமான்ய விஷயம். எவ்வளவு தூரத்தில் எட்டியுள்ள கடலும் ஒரே சமுத்திரத்தைச்சேர்ந்ததுதான்.

சில இடங்களில் சமுத்திரமானது ஒடுங்கி நூறு மைல் வரைக்கும் நாட்டுக்குள் செல்வதுண்டு. அதற்கு 'நெடுங்கழி' என்று பெயர்.

சமுத்திரமானதுமேலேசொன்ன கடல்கள், நெடுங்கழிகள் இவைகளுக்குள் மாத்திரம் செல்லுவதல்ல.

வேறு எங்கெல்லாமோ செல்லுகிறது. சமுத்திரத்தில் உள்ள நீர்தானே, வானமெங்கும் ஆவியாய்ப் பரவுகிறது. அந்த ஆவி மேகமாய்த் திரளுகிறது. மேகம் உலகம் முழுவதும் ஓடி மழையாய்ப் பெய்கிறது.

மழை நீரானது புல் பூண்டுகளுக்கெல்லாம் வேரில் இருந்து நுனி வரையும் போய் நிறைகிறது. அப்படியே சகல பிராணிகளுக்குள்ளும், நமது உடலுக்குள்ளும் போய் நிற்கிறது. ஆகவே எல்லாம் சமுத்திர மயம்.

இனி ஒரு பசும் புல்லை எடுத்துக்கொண்டோமானால், அதிலே சமுத்திரம் பெருகி இருக்கிறது என்று சொல்லுதல் பொருந்தும். ஆகவே புல்லைப் பார்த்து, 'இது சமுத்திரம் அல்ல' என்று சொல்லலாம். 'சமுத்திரமே' என்றும் சொல்லலாம்.

* * *

கடவுள் தத்துவமானது எங்கும் ஒரே அடியாய் ஒவ்வொரு வஸ்துவிலும் நிறைந்து நிற்கிறது. ஆனாலும் ஒவ்வொரு வஸ்துவிலும் ஒரு நியதியின்படியே இயங்குவதால் தனிப்பட்ட பல வஸ்துக்கள் என்றும் கடவுள் தத்துவத்தைக் குறிப்பிடலாம்.

மேலும் எந்த வஸ்துவையும் சுட்டி 'இது கடவுள் அல்ல' என்று சொல்லலாம். 'கடவுள்' என்றும் சொல்லலாம். கடவுள் தத்துவம் தான் எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருக்கிறதே!

ஒன்றே என்னில் ஒன்றேயாம்
பல என்றுரைக்கில் பலவேயாம்
அன்றே என்னில் அன்றேயாம்
ஆம் என்றுரைக்கில் ஆமேயாம்

கடவுள் தத்துவமானது எங்கும் நிறைந்ததாய், எல்லாவற்றிலும் நிறைந்ததாய், எல்லாவற்றையும் இயக்குவதாய் இருக்கிறது. ஆகையால் கடவுள் உண்டென்று சொல்லுவதில் கஷ்டம் இல்லை.

எல்லாவற்றையும் இயக்குவதாய் இருந்தாலும், அறுதியான ஒரு நியதி தத்துவத்தின்படியே எல்லா இயக்கமும், உயர் வர்க்கங்



## வ.உ.சி.யும் மதுவிலக்கும்

"மது அருந்துவதுதான் குற்றமே ஒழிய, அதை விற்பதோ, அல்லது வாங்குவதற்கு அனுமதி அளிப்பதோ குற்றம் ஆகாது" என்று ஓர் அரசியல்வாதி 'பொன் மொழி' உதிர்த்திருக்கிறார்.

ஆனால் மற்றோர் அரசியல்வாதி இதற்கு ஆணித்தரமான மறுப்பு ஒன்றை ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே வழங்கியிருக்கிறார்.

1. கள் உண்ணக் காசு அளித்தல்
2. கள் விற்றல்
3. கள் ஆக்கல்
4. கள் உண்ணும் தீயோரைக் காதலித்தல்
5. அதன் தன்மையுள்ள மற்ற வற்றை உட்கொள்ளல்

ஆகிய ஐந்தும் மது அருந்தும் குற்றத்துக்குச் சமம்தான் என்று கூறியவர் வ.உ.சி.

ஆதாரம் 'மெய்யறிவு'

○

முதலில் புத்தகம் :
வேலை
கடமை
அடக்கம்

முடிவில் வெற்றி:
ஓய்வு
உரிமை
உயர்ந்த வாழ்வு
- வ. உ. சி.யின் மணிமொழி

## அறிஞரும் வள்ளலும்

" அறத்தைக் காணும் அறிவே
மரமாம் ;
அறத்தைப் பிழைத்த அறிவே
மிருகம் ;
அறத்தைப் புரியும் அறிவே
மனிதன் ;
அறத்தைக் காக்கும் அறிவே
கடவுள்."

பாடியவர் திருமூலர் அல்லர்!

பிரபல தேசபக்தக் கவிஞராகிய அவர், ஐம்பத்தாறு ஆண்டுகளுக்கு முன் வெளியான தம் நூலின் முன்னுரையில், "இப்பதிப்பை அச்சிடுவதற்குச் சென்னை ஹைகோர்ட் வக்கீலும், சிறந்த தேசாபிமானியும் ஆகிய சேலம் ம-ள-ள-ஸ்ரீ.............. அவர்கள் பொருளுதவி செய்தார்கள்" என்று குறிப்பிட்டிருக்கிறார். கவிஞரும் வள்ளலும் யார்?

வ. உ. சிதம்பரம் பிள்ளையும் ராஜாஜியும்.



ஆதாரம்: வ. உ. சி.யின் 'அகமே புறம்'.
தகவல்: செலக்ஷி

---

களின் பிறப்பு, வளர்ப்பு, வளர்ச்சி, மறைவு யாவுமே நிகழ்கின்றன. ஆகவே நியதி ஒன்று தான் மிஞ்சுகிறது. கடவுளது செயல் என்று சொல்லுவதற்கு ஒன்றும் இல்லாததால், கடவுளை 'இல்லை' என்றும் சொல்லிவிடலாம்.

'உண்டே என்னில் உண்டேயாம்
இலதேன் றுரைக்கில் இலதேயாம்'

சரி, மேலே சொன்ன நியதியின் சர்வ வியாபகம் காரணமாக, ஆணவமாகிய 'நான்' என்பதும், கடவுள் தத்துவத்துக்கு உள்ளேயே அடங்கி விடுகிறது. கடவுள் தத்துவமானது 'இல்லை' என்ற லட்சணத்துக்கு வரும்போது அதன் சிறு பகுதியாகிய ஆணவமும் இல்லை என்றுதானே ஆகும்.

இறைவன் காரியமே அந்த அழகில் இருக்கிறதாம். பிறகு, நாம் ஒருவர் உண்டென்று சொல்வதற்கு இடம் எங்கே? இப்போது பாடலைப் பார்க்கலாம்.

ஒன்றே என்னில் ஒன்றேயாம்
பல என் றுரைக்கிற் பலவேயாம்
அன்றே என்னில் அன்றேயாம்
ஆம் என்றுரைக்கில் ஆமேயாம்
உண்டே என்னில் உண்டேயாம்
இலதேன் றுரைக்கில் இலதேயாம்
நன்றே நம்பி, குடிவாழ்க்கை
நமக்கிங் கென்னோ பிழைப்பம்மா !

"ஒன்றே என்னில் ஒன்றேயாம்" வேறு ஒன்று என்பது இல்லாமல் எங்கும் நிறைந்து ஒருவனாக இருக்கிறான் இறைவன் — என்று சொல்லலாம். இதுதான் உண்மை. ஆனாலும் பலவகைப்பட்ட தனித்த இயக்கங்கள் போலவும் தோற்றமளிக்கிறான் அவன். அதனால் பல என்றும் சொல்லலாம்.

" அன்றே என்னில் அன்றேயாம்" ஒரு வஸ்துவைக் குறித்து "இது அல்ல இறைவன்" என்று சொல்வது சரியான வார்த்தைதான். ஒரு புல்லைப் பார்த்து, "இது அல்ல எங்கும் நிறைந்த இறைவன்" என்று சொல்லுவதில் பொருத்தம் இருக்கத்தானே செய்கிறது? ஆனாலும் ஒரே மயமான இறைவனது பாகம் தானே புல். அதனால் 'புல் இறைவன்தான்' என்று சொல்ல இடம் தருகிறது.

" ஆம் என்றுரைக்கில் ஆமேயாம்."

* * *

"உண்டே என்னில் உண்டேயாம்!"

உலகத்தில் எண்ணிறந்த அற்புத தத்துவங்களைப் பார்க்கிறோம். அண்டபிண்ட சராசரங்களில் நிகழும் நிகழ்ச்சிகள் எல்லாம் அற்புதங்களே ! அந்தச் செயல்களுக்கு யாரும் உரியவர் அல்லர். இறைவனது செயல்கள் தாம் அவை என்று சொல்லி இறைவன் உண்டென்பதைச் சாதிப்பது எளிது.

இறைவன் இல்லை என்று சாதிப்பதுதான் கஷ்டம். அதையும் நம்மவர்கள் சாதிக்கிறார்கள்.

ஓர் உதாரணம் :

நம்முடைய படுக்கை அறை மேல்மாடியில் இருக்கிறது. கீழ்க்கட்டில் இருந்து வேலை பார்ப்போம், வாசிப்போம். இரவு பத்து மணி ஆனதும் வாசல் கதவை அடைத்துத் தாளிட்டுவிட்டு, விளக்கையும் அணைத்துவிட்டுப் படி வழியாக மேலே ஏறிப் படுக்கை அறைக்குள் போய் மெத்தை விரித்த கட்டிலில் படுத்துக் கொள்கிறோம்.

ஒவ்வொரு நாளுமே இரவு பத்து மணி ஆனதும் இந்தக் காரியத்தைச் செய்கிறோம்.

ஒரு மாசம் ஆகிவிடுகிறது. மெத்தையில் படுத்திருக்கிறோம். படுத்துக் கால் மணி

நேரம் ஆகிவிடுகிறது. ஒரு சந்தேகம் பிறக்கிறது. 'கதவை அடைக்கவில்லையோ?' என்ற சந்தேகம். அப்படியே எழுந்திருக்கிறோம். படி வழியாகக் கீழே இறங்குகிறோம். கீழே வந்து பார்க்கிறோம்.

கதவு அடைபட்டிருக்கிறது. தாளையும் போட்டிருக்கிறது.

அதைப் பார்த்தவுடன், "ஓஹோ, கதவை அடைத்ததிலும், தாளிட்டதிலும் குறையில்லை — நாம்தானே செய்தோம்" என்று ஞாபகத்துக்கு வருகிறது. பல நாட்கள் மேலே சொன்ன காரியங்களை ஒரே ஒழுங்கு முறையில் செய்து வந்தால் "நாம் செய்தோம்" என்ற உணர்ச்சி மனசைவிட்டுக் கழன்றுவிடுகிறது. இந்த ஒரு நியதி — ஒழுங்கு காரணமாகவே செயலுக்குரிய 'நான்' இல்லாமல் போகிறது.

இனி,

கடவுள் தத்துவமானது அநாதியாய், இறுதி இல்லாத காலத்தையே எட்டுவதாய், எங்குமே ஊடுருவி நிற்பதாய் உள்ள ஒரே நியதித் தத்துவம்தான்.

இந்தப் பரிபூரணமான நியதிக்குள் செயலுக்குரிய அம்சம் ஏதும் புகுவதற்கு இடம் இல்லை. இறைவனது செயலுக்கும் இடம் இல்லை.

ஆகவே இறைவனும் இல்லை.

"இலதென் றுரைக்கில் இலதேயாம்."

* * *

"நன்றே நம்பி குடி வாழ்க்கை"

நம்முடைய எஜமானனை இறைவனது ஸ்தானம் இந்த அழகில் இருக்கிறது — இல்லை என்ற நிலையில்.

"நமக்கிங் கென்னே பிழைப்பம்மா!"

அந்த இறைவனது கருவியாய் உள்ள நமக்குச் செயலென்பதேது ? செயலென்பது இல்லையானால் நாம் என்பது இல்லைதானே ?

**குறிப்பு:**

செய்யுளில் உள்ள ஓசை அம்சங்களைக் கவனிக்க வேண்டும். "ஒன்றே என்னில்" என்பதில் இளக்கமான தொனிதான் இருக்கிறது. ஒன்றென்றும், அன்றென்றும், உண்டென்றும் சொல்லுவதுதான் உண்மை. பல என்றும், ஆம் என்றும், இலதென்றும் சொல்லுவதில் ஒரு வகையான போலி ரஸம்தான். உண்மை வேகத்தையும் போலி ரஸத்தையும் பிரித்துக் காட்டுவதற்காகவே வேறுபட்ட ஓசைகளைக் கையாண்டிருக்கிறார் கவிஞர்.

முரண்பட, "ஒன்றென்றும்", "பலவென்றும்" சொல்லுவதிலேயே ஒரு ஹாஸ்யம். அப்படியே அன்று, ஆம்; உண்டு, இலது; என்பதிலும். இலதென்று முடிப்பதில் அதிக ஹாஸ்யத்தின் உச்சம் கடைசி அடியில் அழகாய் உரு எடுக்கிறது.

அரிய பெரிய சமயத். தத்துவங்களோடு கம்பர் எப்படி விளையாடுகிறார் என்பது இந்தச் செய்யுளின் பாவ உருவத்தில் தெளிவாய் விளங்குகிறது.

## நல்லதோர் வீணை

சிறை நண்பர்கள் மூவர். சிறையிலிருந்து வெளிவந்தபின் ஒருவன் திருந்தி வாழ நினைக்கிறான். இன்னொருவன் பழி வாங்க முனைகிறான். மூன்றாமவனோ நல்லதோர் வீணைக்கு நாதமூட்டும் தந்திபோல நகைச்சுவை கூட்ட விழைகிறான்.

இவர்கள்தான் முறையே மோகன், சுரேஷ், பாண்டியன்.

மோகனின் தந்தை சிவானந்தம் கருணாகரன் என்னும் கண்டிராக்டருடன் கூட்டுச் சேர்ந்து மோசம் செய்யப்படுகிறார். அவருக்கு உள்ளூறச் சினம்; கருணாகரனைப் பழி வாங்க வேண்டும் என்ற நோக்கம்.

சுரேஷின் தந்தையின் சாவுக்குக் கருணாகரனே காரணம் என்ற ஒரு தப்புக் கணக்கு. இதை மனத்தில் வைத்துக் கொண்டு சுரேஷ் கருணாகரனைப் பழி வாங்கத் தருணம் பார்க்கிறான். மோகன் கருணாகரனிடம் வேலைக்கு அமர, அவன் உதவியால் சுரேஷ் அவரிடமே வேலை பெற அவன் எண்ணத்துக்கு வாய்ப்பும் பெருகுகிறது. அதோடு கருணாகரனின் மகளோடு காதலும் வளர்கிறது.

சுரேஷின் தமக்கை கவிதா கருணாகரனின் கம்பெனிக்கு வழக்கறிஞராகப் பணியாற்றுகிறாள். ஆனால் சுரேஷ் தன் தம்பி என்பதை மறைக்கிறாள். இடையிலே ஜம்பு என்று ஒருவன். அவனுக்கு யார் என்ன தீங்கு செய்தார்களோ, கருணாகரனையும் சுரேஷையுமே பழி வாங்கத் துடிக்கிறான். மோகனிடம் உள்ளூறப் பொருளாக ஓடும் அஹிம்சை கடைசியில் கதையைச் சுபமாக முடிக்கிறது.

சுருக்கமாக, நல்லதோர் வீணைக் கச்சேரி நடத்த முனைந்திருக்கிறார் கதை, வசனம் எழுதிய நாகர்கோவில் ஸ்ரீ கிருஷ்ணன். இடைப் பிரிவுகளை ஸ்ரீராமணி, விசுவநாதன் போன்றவர்கள் தங்கள் அநாயாச நடிப்பால் சுவை கூட்ட முனைந்திருக்கிறார்கள். ஆனால் பெண் பாத்திரங்கள் பளிச்சிடவில்லை. காரணம், கதை அமைப்பில் உள்ள குறையே.

கச்சேரி களை கட்டப் பிரதான பாடகருக்குப் பக்க வாத்தியங்கள் கைகொடுத்து உதவுவதுபோல், கதைக் கரு, பாத்திரப் படைப்பு ஆகியவை நாடகத்துக்குக் கைகொடுத்து உதவப் பல இடங்களில் தவறியுள்ளன. அந்தக் குறையை ஈடுகட்ட வீனஸ் எண்டர்பிரைஸின் இசைத் துணை உதவியிருக்கிறது. ஆகமொத்தம் இன்னும் அனுபவம் தேவை; ஆற்றல் தேவை.

— ரா. வீ.



---

# சவிதாவுக்கு ஒரு சவால்!



நாளின் ஒவ்வொரு கணமும் சவிதா தேவிக்கு ஆசிரம வேலைதான். அவளுக்கென்று தனி வாழ்க்கை இல்லை. இதனால் அவள் தன் இளமைக் காலத்து நினைவை மறந்திருந்தாள். அவளுக்குப் பழங்கால வழக்கப்படி ஒன்பது வயதிலேயே திருமணம் ஆகிவிட்டது. பத்து வயதில் கணவனை இழந்து விட்டாள். செல்வச் சீமானான தந்தை பெண்ணுக்கு வீட்டிலேயே படிப்புச் சொல்லிக் கொடுத்து பி. ஏ. பாஸ் செய்வித்தார். ஒத்துழையாமை இயக்கம் நடந்த காலம் அது. நாட்டைக் கவர்ந்திழுத்த மகாத்மாவின் ஒத்துழையாமை வெள்ளத்தில் அகப்பட்ட சவிதா தேவி கதர் உடுத்தினாள்; ராட்டை சுழற்றினாள்; வனிதாசிரமத்தையும் தொடங்கினாள். இப்படிச் செய்து தன் வாழ்க்கையைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்ள முயன்றாள்.

ஆசிரமத்தில் இப்பொழுது குழந்தைகளே அதிகம். அநாதையான பல குழந்தைகளை இவள் எடுத்து வளர்த்திருக்கிறாள். சில குழந்தைகளை யார் யாரோ கொண்டு வந்து சேர்த்தார்கள். நெறி தவறிக் குழந்தைகளைப் பெற்ற தாய்மார்கள், ஆசிரம வாயிலில் விட்டு விட்டுப் போன குழந்தைகளும் இதில் இருந்தார்கள். முப்பது குழந்தைகளுக்கு மேல் சேர்ந்தார்கள். இது தவிர ஏழெட்டு அநாதைப் பெண்களும் தாமாகவே வந்து சேர்ந்தார்கள். அவர்களில் சிலர் வெளியிலும் வேலை பார்த்தார்கள். சிலர் குழந்தைகளைக் கவனித்துக் கொண்டார்கள்.

சவிதா தேவி மிகவும் கண்டிப்பானவள். ஆசிரமக் காம்பவுண்டுக்குள் ஒரு தூசி தும்பு இருக்கக் கூடாது. ஆண் வாடை வீசக் கூடாது. நன்னடத்தையைக் காப்பாற்றுவதற்காக, அவள் பெண் குழந்தைகளை மட்டும் நீடித்து ஆசிரமத்திலேயே நிறுத்திக் கொள்வாள். ஆண் குழந்தைகளை ஐந்து வயது வரையில் காப்பாற்றி ஊரின் மற்றொரு பகுதியிலிருக்கும் வேறோர் அநாதாசிரமத்துக்கு அனுப்பி விடுவாள். அநாதைக் குழந்தைகள் ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்த தேதியையே அவர்கள்

பிறந்த தினமாகக் குறித்துக் கொள்வாள். அந்த நாளை உற்சாகமாக ஆசிரமத்தில் கொண்டாடுவார்கள். சவிதா தேவியே குழந்தைகளுக்குப் பெயரை நிச்சயித்து ஊர்ப் பெரிய மனிதர் ஒருவரைக் கொண்டு குழந்தைகளுக்கு அந்தப் பெயரை வைப்பாள். அவர்களுள் பதினொன்று வயதான ஜலஜா என்னும் பெண், சவிதா தேவிக்கு வலக் கையாக இருந்து உழைத்தாள். நல்ல சுறுசுறுப்பான பெண்; அவளுக்குத் தக்க கணவனைப் பார்க்க வேண்டிய கவலை இப்போது சவிதா தேவியைப் பிடித்துக் கொண்டது.

முகம் கழுவிக் கொண்டு சவிதா தேவி ஆபீஸ் அறைக்கு வந்தபோது அங்கிருந்த பெஞ்சியில் இரண்டு வயதுக் குழந்தை ஒன்று அழுது கொண்டே உட்கார்ந்திருந்தது. காளம்மா, தொள தொளப்பான சட்டை ஒன்



கன்னடம்:
ஏ.எஸ்.வேணுகோபால்ராவ்
தமிழாக்கம்:
சீதாதேவி

றைப் போட்டவாறு அதற்கு வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தாள். அப்பொழுதும் குழந்தை அழுகையை நிறுத்தவில்லை. "பாருங்கம்மா! இந்தச் சனியன் பால் குடிக்க மாட்டேங்குது; அம்மா, அம்மான்னு அடிச்சுக்குது. காலங்காத்தாலே கதவைத் திறக்கும்போதே இந்தத் தரித்திரம் என் கண்ணில் பட்டுவிட்டது. இதை விட்டுட்டுப் போன இதன் அம்மாவுக்கு என்ன கேடு வந்துச்சோ?" என்றாள் காளம்மா.

சவிதா தேவியின் புருவம் உயர்ந்தது. பார்வைக்கு ஓரளவு அழகான குழந்தை. வறுமையில் வளர்ந்தும்கூட, மாம்பழக் கன்னங்களுடன் எடுத்துக் கொஞ்சலாம்போல் இருந்தது. கண்ணீர் கன்னத்தில் விழுந்து வழிந்தோடியது; தலையெல்லாம் ஒரே சிடுக்கு. சவிதாதேவியின் முகத்தில் வேதனையின் சாயல் தோன்றி மறைந்தது. பல வருஷங்களுக்கு முன்னென்றால் இந்தக் காட்சியைக் கண்டு அவள் விக்கி விக்கி அழுதிருப்பாள். ஆனால் வாழ்க்கை, இப்பொழுது அவளுக்குப் பொறுமையைப் பழக்கியிருக்கிறது. முகத்தில் ஒரு பாவமும் இல்லாமல் இரு கைகளையும் நீட்டி,

"வா, குழந்தை" என்றாள். அது இன்னும் உரக்க, 'அம்மா' என்று கத்திக் கொண்டு அழுதது. சவிதாதேவி, மேஜை டிராயரைத் திறந்து இரண்டு பிஸ்கட்களை எடுத்துக் குழந்தைக்குக் கொடுக்க முயன்றாள். அப்படியும் அடம் பிடித்த அந்தக் குழந்தையின் அழுகை சிறிதும் குறையவில்லை. "ஏய்! அழாதே! சும்மா இருடி!" என்று சவிதா அதட்டிப் பார்த்தாள். குழந்தையின் அழுகை ஊரையே பிளந்தது. சவிதா தேவி மிகுந்த சலிப்புடன், 'காளி, குழந்தையை எடுத்துக் கொண்டு அப்படியே எங்கேயாவது போய்விட்டுவா. சுத்த அழுமூஞ்சிக்குழந்தை' என்றாள்.

யாரும் பெயர் வைக்காத அந்த அழு மூஞ்சிக் குழந்தைக்கு அன்று பஜனை முடிந்த பின் சவிதா தேவி, அன்போடு வைத்த பெயர் கஸ்தூரி.

ஆசிரமத்துச் சிறுமிகளுள் ஜலஜா மிகவும் கெட்டிக்காரி. அவளுடைய சுறுசுறுப்பினால் ஆசிரமத்து வேலைகள் இத்தனை நாட்களும் குந்தகம் இல்லாமல் நடந்தன. குழந்தைகளுக்கிடையில் அடிக்கடி ஏற்படும் சிறு சிறு சண்டைகளை அவளே தீர்த்து வைத்தாள். எந்தப் புகாரும் சவிதாதேவி வரைக்கும் போகவில்லை. அதனால் சவிதாதேவிக்கு ஜலஜாவிடம் நல்ல அன்பும் மதிப்பும் உண்டாயின.

அடுத்த மாதம் ஜலஜா மணம் முடித்துக் கொண்டு போய் விடுவாள். சவிதாதேவி தேர்ந்தெடுத்த மணமகன் அடுத்த ஊரில் உள்ள பள்ளி ஒன்றில் வேலையாக இருக்கிறான். போதுமான அளவு பண்பட்ட கருத்துக்கள் கொண்ட அழகிய இளைஞன். உண்மையில் ஜலஜா அவனுக்கு ஏற்ற கெட்டிக்காரப் பெண். இந்த ஜோடியின் மணம் காந்தி ஜயந்தி அன்று மிக எளிய முறையில் நடந்தேறியது. மணமக்கள், புதிய கதராடை உடுத்து ஜோடியாக வந்து விளங்கியபோது சவிதாதேவியின் கண்கள் பனித்தன.

இது ஆசிரமத்தில் நடந்த முதல் திருமணமாகும். மற்றப் பெண்கள் எல்லோரும் வளர்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எல்லோருடைய வாழ்க்கைக்கும் வழிகாட்ட வேண்டும் என்ற கவலை, சவிதாதேவியை அரித்துக் கொண்டிருந்தது.

ஜலஜாவை அவள் கணவன் அழைத்துக் கொண்டு போன அன்று இந்தக் கவலை எல்லாம் குழப்பியதால் அவளுக்கு அன்றிரவு தூக்கம் பிடிக்கவில்லை. ஒரு நோக்கில் பார்த்தால் அவளுடைய வேலை எளிதாக இருந்தது. இங்கே ஜாதிமதக் கட்டுப்பாடு இல்லை. ஜாதகம், கோத்திரம் இவற்றின் குறுக்கீடு இல்லை. இந்தப் பெண்களை மணக்க வருபவர்கள் ஏதோ ஒருவிதத்தில் வாழ்க்கையில் நொடித்தவர்கள்தாம். பரம ஏழை, மனைவி இறந்ததால் குழந்தைகளைப் போஷிக்கத் துணை தேடி வருபவர்கள், கையோ காலோ சிறிது ஊனமானதால் சமூகத்தின் ஏளனத்துக்குப் பாத்திரமானவர்கள், பெண்களைக் கரையேற்ற வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்ட சில இளைஞர்கள் — இது போன்ற பல வரன்கள் எப்படியோ சவிதா தேவியின் கண்களில் பட்டுவிடும். ஆசிரமத்தில் வளர்ந்த பெண்கள், அவர்களைத் தேடி வந்த வரன்கள் ஆகிய இரு சாராருமே சவிதா தேவிக்கு நன்றி செலுத்தினார்கள். இந்த முறைப்படி திருமணம் நடந்து, ஆசிரமத்திலிருந்த பல பெண்கள் வெளியே போய் விட்டார்கள். புதியவர்கள் வந்து சேர்ந்து கொண்டும் இருந்தார்கள்.

ஆசிரமத்துப் பழத் தோட்டத்தில் மரங்கள் துளிர்த்தன. எப்பொழுதும் சிரிப்பதுபோல் காணப்படும் மாமரங்களில் குயில் இனிமையாகக் கூவத் தொடங்கியது. மல்லிகைக் கொடியின் ஒவ்வொரு கணுவிலும் மொட்டுக் கட்டி, மெல்ல மெல்ல மலர்ந்து எங்கும் மணம் பரவியது. மதங்கொண்ட வண்டுகள் ரீங்காரம் செய்தன.

"அம்மா; இன்னும் காலம் கடத்தாதீங்க. கஸ்தூரிக்குப் பதினாறு முடிஞ்சு போச்சில்லே?" என்று கேட்டாள் காளம்மாள்.

கண்கள் சிவக்கச் சவிதா தேவி, "என் பொறுப்பு எனக்குத் தெரியும். உன் உபதேசம் ஒன்றும் வேண்டாம்" என்று சீறினாள். காளம்மா வாயடைத்துப் போய் நைஸாக அங்கிருந்து நழுவிவிட்டாள்.

கஸ்தூரியின் திருமணத்தைப் பற்றி அவள் யோசிக்காமல் இல்லை. கஸ்தூரியின் வயதினரான ராதைக்கும் வினோதாவுக்கும் திருமணம் நடந்து ஆசிரமத்தை விட்டுப் போய்விட்டார்கள். சென்ற மாதம் திருமணம் நடந்த இந்திரை, கஸ்தூரிக்குப் பிறகு ஆசிரமத்துக்கு வந்தவள். ஆனால் கஸ்தூரியின் திருமண யோசனை மட்டும் மனத்தில் தோன்றித் தோன்றி நழுவிக் கொண்டே இருந்தது.

சவிதா தேவியின் நிழல்போல் வளைய வந்து கொண்டிருந்த கஸ்தூரி, காண்போர் கண்களைக் கவர்ந்து கொண்டாள். ஏற்கனவே இரண்டொருவர் அவளைப் பெண் கேட்டுவிட்டார்கள். சவிதாவின் சூடான கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் பலர் பின் வாங்கினார்கள். இதுபோன்ற பல சந்தர்ப்பங்கள் நினைவுக்கு வரச் சவிதாதேவி தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

நாகேந்திரனை மறுத்ததற்காகக் கமிட்டி அங்கத்தினர் பலர் வருந்தினார்கள். சிலர் கடுமையாக விமரிசித்தார்கள். நாகேந்திரன் உண்மையிலேயே நல்ல இளைஞன்; படித்தவன்; உயர்நிலைப்பள்ளி ஒன்றில் ஆசிரியனாக இருப்பவன். "இவனை மறுப்பதில் அர்த்தமே இல்லை. சவிதாதேவி, உங்கள் ஆட்சேபம் தான் என்ன? இந்த மாதிரி மாப்பிள்ளையை எங்கே தேட முடியும் ?" என்றார் ஒருவர்.

"உங்களுக்கு அந்தக் கவலை வேண்டாம். அவனுடைய அம்மாவின் நடத்தை பற்றி உங்களுக்குத் தெரியுமா ?"

"அது முடிந்த கதை. பையனைப் பாருங்கள்."

"சீ, அவள் நடத்தை கெட்ட ஒருத்தியுடைய மகன் ! விளக்கைப் பிடித்துக் கொண்டு போய்க் கிணற்றில் விழுவார்களா ?" சவிதாவின் உடம்பெல்லாம் கோபத்தால் நடுங்கியது.

அந்த அங்கத்தினருக்குப் பொறுமை போய் விட்டது.

"சவிதாதேவி! நீங்கள் இப்படிச் சொல்வது அழகல்ல. அப்படிப் பார்த்தால் கஸ்தூரியின் பழைய கதை உங்களுக்குத் தெரியுமா ? தாயால் கைவிடப்பட்ட இந்தப் பெண் பரிசுத்தமானவளா?" என்று கேட்டார்.

"ஐயா, போதும் நிறுத்துங்கள். இதைப் பற்றிச் சர்ச்சை வேண்டாம்" என்று கைகூப்பினாள் சவிதாதேவி.

அன்று இரவு கஸ்தூரி அழுதுகொண்டே, "அம்மா, என்னால் உங்களுக்கு எவ்வளவு தொந்தரவு ?" என்று சொன்னாள்.

"போதுமடி, தலையரட்டை. பெரியவர்கள் பேச்சு உனக்கு எதற்கு? பேசாமல் இடு !" என்று சீறினாள் சவிதா.

அன்று காந்தி ஜயந்தி. வழக்கப்படி ஆசிரமம் முழுதும் சுத்தம்செய்தல், ராட்டையில் நூற்பது போன்ற நிகழ்ச்சிகளெல்லாம் முடிந்து, பஜனை நடந்து கொண்டிருந்தது. புனிதச் சூழ்நிலையில், 'ரகுபதி ராகவ ராஜா ராம், வைஷ்ணவ ஜனதோ' முதலிய பாட்டுக்கள் பாடியாயிற்று. கூட்டத் தலைவரும் சவிதாதேவியும் சிறு பிரசங்கம் செய்தார்கள். அவர்களது உள்ளங்கள் குதூகலமும் நிறைவும் பெற்றன. வந்தவர்கள் ஒவ்வொருவராகப் புறப்பட்ட பின்னும் சவிதாதேவி, பாபுஜியின் படத்தின் எதிரே உட்கார்ந்திருந்தாள். அவள் பக்கத்திலேயே அமர்ந்து கஸ்தூரி தம்புராவை மீட்டிக் கொண்டு துளஸிதாசரின் பதம் ஒன்றை இனிமை சொட்டப் பாடிக் கொண்டிருந்தாள். பாடலையும் கேட்பவர்களும் கண்மூடி மெய்ம்மறந்திருந்தார்கள். பாட்டு முடியும் தறுவாயில்,''சபாஷ் ஆன்ட்டி ஒண்டர்ஃபுல்'' என்ற பாராட்டுடன் கைதட்டும் ஒலி கேட்டது. சவிதாதேவி திடுக்கிட்டுக் கண் திறந்தாள். அவளுடைய அக்காவின் மகன் சுரேஷ் எதிரே நின்றுகொண்டிருந்தான். எம். பி. பி. எஸ். படித்து முடித்தபின் அப்போதுதான் அந்த ஊருக்கு உத்தியோகம் பெற்று வந்திருக்கிறான். ஒளிமிக்க அவன் கண்கள், கஸ்தூரியின் மேலேயே நிலைத்தன. கஸ்தூரி வெட்கத்துடன் தம்பூராவைக் கீழே வைத்துவிட்டு, ''அம்மா, நான் போகிறேன்'' என்று எழுந்திருந்தாள். சுரேஷ், ''ஆன்ட்டி, உங்கள் இரும்புக் கோட்டையைத் தகர்த்துக் கொண்டு உள்ளே நுழைவதற்குள் போதும் போது மென்றாகி விட்டது. ஒவ்வொரு வாயிலிலும் என்ன என்ன கேள்விகள் அம்புபோல் எழுந்தன. 'நீ என் சித்தி' என்று சொன்னாலும் உன் சேவிகள் நம்பமாட்டேன் என்கிறார்கள். ஹாம், எப்படி இருக்கிறது சித்தி, ஆசிரம வாழ்க்கை ?'' என்றான்.

சவிதாதேவி வாய்விட்டுச் சிரித்தாள். ''வா, சுரேஷ்! வருஷக் கணக்காயிற்று, உன்னைப் பார்த்து. படிப்பெல்லாம் முடிந்து விட்டதல்லவா? மிகவும் சந்தோஷம். இனி மேல் விரைவிலேயே எனக்கு மருமகள் வந்து விடுவாள்'' என்றாள் வாத்ஸல்யத்தோடு.

சுரேஷ், ''இனி மேல் அந்தக் கவலையை உனக்கு விட்டுவிட்டேன் சித்தி. 'சேற்றில் பிறந்த செந்தாமரை'களை ஆசிரமத்தில் கொண்டுவந்து வைத்துப் பாதுகாக்கிறீர்களே; அவர்களில் ஒருத்தியே ஏன் என் மனைவியாக ஆகக்கூடாது?' என்று சற்று முன்தான் நினைத்துக் கொண்டேன். இதோ பார், என் லட்சியங்கள் எல்லாம் உனக்குத் தெரியும்'' என்றான்.

சவிதாதேவிக்குத் தூக்கிவாரிப் போட்டது. கஸ்தூரியையே பருகிவிடுவது போல் பார்த்துக் கொண்டிருந்த இரண்டு வாலிபக் கண்கள் அவள் நினைவுக்கு வந்தன. தன்னை மெல்லச் சமாளித்துக் கொண்டு, ''சுரேஷ், அசட்டுத் துணிச்சல் வேண்டாம் அப்பா. உனக்கென்ன குறை? கல்வி, அழகு எல்லாம் நிறைந்திருக்கின்றன. யார் வேண்டுமானாலும் போட்டி போட்டுக் கொண்டு பெண்ணைக் கொடுப்பார்கள். வைத்தியக்காரன் போல் வீண் மயக்கத்துக்கு ஆளாகாதே!'' என்றாள்.



சுரேஷ்: ஆன்ட்டி, என் காதில் விழுவது நிஜந்தானா? அதுவும் உன் வாயிலிருந்து! நீ மகாத்மாவிடம் பக்தி மிக்க சிஷ்யை. சேவா கிராமத்தில் பயிற்சி பெற்றவள். கதரைத் தவிர வேறொன்றைத் திரும்பியும் பார்க்காத சமூக சேவகி சவிதா தேவியா இப்படிப் பேசுகிறாய்? சபாஷ்!

சவிதா: டேய், நாடகபாணி பேச்சை நிறுத்து. அந்த லட்சியங்களெல்லாம் என்னோடு இருக்கட்டும். நம் குடும்பத்துக்கு ஒரு சமூக சேவகியே போதும். நீ உன் அப்பா அம்மா மனம் குளிரும்படி ஒரு நல்ல குடும்பத்துப் பெண்ணை மணந்துகொள்.

சுரேஷ்: அப்பா, அம்மாவுக்குப் பிடித்தால் போதுமா? எனக்குப் பிடிக்க வேண்டாமா?

சவிதா: கட்டாயம் பிடிக்க வேண்டும். ஒன்றுக்குப் பத்துப் பெண்ணைப் பார். பிடித்தவளைத் தேர்ந்துகொள். வீணாக வானத்துக்கு ஏணி போடாதே. பிறப்பிடம் தெரியாத அநாதைப் பெண்ணின் பின்னால் சுற்றிக் கொண்டு கெட்டுப் போகாதே.

சுரேஷ் தலைகுனிந்தான். சாவதானமாக இப்படிச் சொன்னான்: ''ஆன்ட்டி, உண்மையாக ஒரு மணி நேரத்துக்கு முன்பு கல்யாணம் பற்றிய எண்ணமே என் மனத்தில் இல்லை. இப்போது மனத்தை ஏதோ வெறி பிடித்து ஆட்டுவது போல் இருக்கிறது. ஆன்ட்டி, எனக்குத் தோன்றுவதைச் சொல்கிறேன். நீ வளர்த்த எந்தப் பெண்ணும் மட்டமாக இருக்க மாட்டாள். இருக்கட்டும், பார்ப்போம். என் அதிருஷ்டம் எப்படி இருக்கிறதோ?''

சவிதா தேவி சிரித்தாள்.

சுரேஷ் அடிக்கடி ஆசிரமத்துக்கு வந்து கொண்டிருந்தான். அழகனான அவன் தன் சுறுசுறுப்பாலும், அழகாலும் கஸ்தூரியின் மனத்தைக் கவர்ந்து விட்டான். ஒளிமிக்க புதிய இன்ப உலகத்தைக் கனவு காணும் இந்த அன்றில் ஜோடி ஆசிரமத்து இரும்புக் கோட்டையைத் தகர்த்து மனத்தால் வானுயரப் பறந்தார்கள். சவிதா தேவி ஏமாற்றமடைந்தாள்.



**சர்க்காரத் துறைத் தேங்குழல்!**

தேங்குழல் பிழியும் செப்பு ஓர் அழகானவடிவத்தில் அமைந்து. அதன் இருபுறமும் பூண் பிடிக்கச் சொன்னவர் ஒரு டி[illegible] எஞ்சினியர். உள்ளே உள்ள ஓர் இரும்புத் தகட்டு அச்சைச் செய்தவர் மெக்கானிகல் எஞ்சினியர். எண்ணெய் கொதிக்க ஒரு கொதிகலனை உருவாக்கியவர் மெட்டலர்ஜிகல் எஞ்சினியர். அடுப்பு கட்டியவர் ஒரு சிவில் எஞ்சினியர். அதை ஒரே சூட்டில் எரிப்பவர் கம்பஸ்ஷன் எஞ்சினியர். தேங்குழல் மாவின் கலவையைக் கலந்தவர் கெமிக்கல் எஞ்சினியர்.

ஆக ஒரு தேங்குழலுக்குள் ஆறு எஞ்சினியர்கள் இருக்கிறார்கள்!

இந்த முறையில் ஆறு எஞ்சினியர்கள் வைத்துச் சர்க்கார் செலவில் தேங்குழல் செய்தால் ஒரு தேங்குழலின் விலை நூறு ரூபாயாகும்!''

விளக்கம் அளித்தவர்:

திரு கொத்தமங்கலம்ஸுப்பு

நகல்: வெள்ளாகால் இரா.கந்தையா

கடைசியில் ஒரு நாள் தன் வழக்கப்படி குறும்பாகக் கையை உயர்த்தி சுரேஷ் இப்படிச் சொல்லிக் கொண்டே வந்தான்: ''ஆன்ட்டி, இனிமேல் தாங்காது. இட் ஈஸ் இம்பாஸிபிள்! கஸ்தூரி.... ஃபோஸிடாஸ்! இரண்டில் ஒன்று. எதைத் தேர்ந்தெடுக்கட்டும்? நீயே சொல்!''

சவிதா தேவி வருத்தத்துடன் சிரித்தாள். ''குழந்தை! நீ உன்னைப் பற்றியே சொல்லிக் கொண்டிருக்கிறாய். கஸ்தூரியைக் கேட்க வேண்டாமா?'' என்றாள்.

''ஷ்யூர்லி ஆன்ட்டி!'' என்றவன் அவளை இழுத்துக் கொண்டு வந்து நின்றான்.

கஸ்தூரி வெட்கித் தலை குனிந்தாள். ''கஸ்தூரி, சொல்லிவிடு. உனக்கு என்னை மணக்க இஷ்டம் இல்லையா? நீ என் வாழ்வின் ஒளியல்லவா? சொல்லு!'' என்றான்.

அவள் சவிதா தேவியின் மடியில் கவிழ்ந்த வண்ணம் படுத்து. ''நீங்கள் சம்மதித்தால் எனக்கும் இஷ்டம்தான், அம்மா'' என்றாள். அவள் முகம் ரோஜாவைப்போல் சிவந்தது.

சுரேஷ் ''ஆன்ட்டி, இப்போதே இந்த விஷயத்தைப் பற்றி ஊருக்குக் கடிதம் எழுதுகிறேன்'' என்று சொல்லிய மகிழ்ச்சியுடன் சிட்டியடித்த வண்ணம், காற்றில் மிதப்பது போல் ஓடிவிட்டான்.

சவிதா தேவி, கஸ்தூரியின் தலையை நிமிர்த்தி. ''கஸ்தூரி! சுரேஷ் என் அக்காவின் மகன். அவனுடைய அப்பா ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் என்ஜினியர். இது உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள்.

''.........''

''அவனுடைய அம்மாவுக்கு நிறையக் குழந்தைகள். பழைய பழக்க வழக்கங்களில் ஊறிய குடும்பம். கல்யாணத்துக்கு இன்னும் பெண்கள் இருக்கிறார்கள்.''

''.....''

''கஸ்தூரி, சுரேஷ் சுத்த இரண்டுங்கெட்டான். நீயே அவனுடைய சிறுபிள்ளைத் தனத்தைப் பார்த்தாயல்லவா? அவனுக்கு வருங்காலத்தைப் பற்றிய யோசனையே இல்லை.''

''.......''

''ஐயோ, கஸ்தூரி, என்னை விட்டுப் போய் விடுவாயாடி? உனக்காக நான் என்னவெல்லாம் செய்திருக்கிறேன்!''

''........''

''கஸ்தூரி, ஏனடி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு பொம்மை மாதிரி உட்கார்ந்திருக்கிறாய்? நான் இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிக்கா விட்டால்?''

''.......''

சவிதா உரக்கக் கத்தினாள். ''கஸ்தூரி! நீ என்ன பேசாமடந்தையா? பெரியவர்கள் பேச்சில் உனக்கு எவ்வளவு அலட்சியம்?''

இப்போது கஸ்தூரி நிதானமாகத் தலையைத் தூக்கினாள். அவள் பார்வையில் தடுமாற்றம் இல்லை; துக்கம் இல்லை; தவறுசெய்து விட்டோமோ என்ற கழிவிரக்கம் இல்லை. அவளுடைய பேச்சு ஒவ்வொன்றும் நிதானமாக, தெளிவாக ஒலித்தது.

''அம்மா, நீங்கள் இன்னும் மன வளர்ச்சி பெறவேண்டும்!''

''கஸ்தூரி!''

சவிதா தேவி பைத்தியக்காரி மாதிரி கூச்சலிட்டாள். பிரிவுத் துயரத்தால் அவள் உடம்பெல்லாம் பற்றி எரியத் தொடங்கியது. கஸ்தூரியை அடிக்கக் கையை ஓங்கினாள். ஆனால் எடுத்த வேகத்தில் கை கீழே இறங்கியது. கஸ்தூரி பயப்படவில்லை. பின்னுக்கு நகரவில்லை. உலகத்திலுள்ள அன்பெல்லாம் கண்களில் நிறைய ஒரு புன்னகை செய்தாள். அவள் கண்களிலிருந்து இரக்கமே ஆறாகப் பெருகுவது போல் தோன்றியது. அந்தக் கண்களின் ஒளியில் சவிதா தேவி பாகாக உருகிவிட்டாள். தன் சக்தியெல்லாம் போய்விட்டது போலும் தன்னைச் சூழ்ந்த வெறுமையினால் கைகால் விழுந்து போனது போலும் உணர்ந்தாள். உடனே கஸ்தூரியின் மடியில் கவிழ்ந்து படுத்துக் கொண்டு, ''கஸ்தூரி, என்னை மன்னித்துவிடு'' என்று விசித்து விசித்து அழுதாள். ஒரு தாயின் அன்பு சுரக்கக் கஸ்தூரி, ஆதரவாகச் சவிதா தேவியின் தோளைப் பிடித்து, ''எழுந்திருங்கள், உள்ளே போவோம்'' என்றாள்.

சவிதா தேவி கால்கள் தள்ளாடக் கஸ்தூரியின் கையைப் பிடித்துக்கொண்டு சென்றாள்.

சில மாதங்களுக்கு முன்னால் கட்டி முடித்த காந்தி மண்டபம். முற்றத்தில் பலபலவென்று பூத்திருந்த ரோஜா எல்லாமே தன்னைப் பார்த்துக் கேலி செய்து சிரிப்பதாகச் சவிதா தேவிக்குத் தோன்றியது. கஸ்தூரியைச் சமையல் கட்டுக்கு அனுப்பிவிட்டுத் தன் படுக்கையில் விழுந்தாள். கைக்கு அகப்பட்ட ஒரு புஸ்தகத்தை எடுத்து ஓர் ஏட்டைப் புரட்டினாள். அவ[illegible]ங்கள் அங்கேயே நிலைகுத்தி நின்றுவிட்டன. மகரிஷி யாக்ஞவல்கியர் சிரித்த வண்ணம், ''ஆத்மனஸ்துகாமாய — தன் சொந்த விருப்பத்துக்காக'' என்று சீடர்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031.
Managing Editor : T. Sadasivam

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

# ஒளிமிகுந்த கண்களுக்கு உகந்தது சிங்கார் கண்மை

உங்களைச் சுற்றியுள்ள உலகை உங்கள் ஒளிப்பார்வையினால் வெற்றிகொள்ளுங்கள். கண்களின் இயற்கைக் கவர்ச்சியை இதமுடனே போற்றி காக்கும் சிங்கார் கண்மை உபயோகியுங்கள். கசிந்து பரவாமலும், அழகைச் சிதைக்காமலும் இருக்கும் சுகாதாரமான கண்மை இதுவே.

சிங்கார்

கண்மை



பாரமவுண்ட் ப்ரொடக்ட்ஸ்
809, பிரசாத் சேம்பர்ஸ்,
பம்பாய்-4 (BR)






PRATIBHA 2014-4 TM